கனல் தெறிக்கும் வசனம்

அனல் தெறிக்கும் நடிப்பு

மாடர்ன் தியேட்டர்ஸ்....

# மந்திரி குமாரி

· டைரக்ஷன் ·
டி.ஆர்.சுந்தரம் & எல்லிஸ் ஆர்.டங்கன்........

· கதை, வசனம் ·
கருணாநிதி........

........சென்னை........

பாரகன் & பிராட்வே

மற்றும் தமிழ்நாடெங்கும் நடைபெறுகிறது........

........தினசரி 3 காட்சிகள்........

SAKTHY.

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு

○●○

எமது டாக்டர் கீழே குறிப்பிட்ட இடங்களுக்கு விஜயம் செய்வார். குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி சம்மந்தமான எல்லா வியாதிகளுக்கும் அவரிடம் நேரில் கலந்து ஆலோசனை பெறலாம்.

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| புதுக்கோட்டை | 11-7-50 | மெஸர்ஸ். வசந்தா லாட்ஜ் |
| காரைக்குடி | 12-7-50 | மெஸர்ஸ். ஏ.வி. & சன்ஸ். டிராவலர்ஸ் ரெஸ்ட் ஹவுஸ் |
| தேவகோட்டை | 13-7-50 | மெஸர்ஸ். ஸ்ரீ மீனாக்ஷி ஸ்டோர்ஸ் |
| சிவகங்கை | 14-7-50 | மெஸர்ஸ். கெளரி & கம்பெனி |
| தஞ்சாவூர் | 17-7-50 | ராஜா சத்திரம் |
| திருவாரூர் | 18-7-50 | மெஸர்ஸ். மெடிகல் எம்போரியம் அல்லது மெஸர்ஸ். சுப்பய்யா மெடிகல் ஸ்டோர்ஸ் |
| மன்னார்குடி | 19-7-50 | மெஸர்ஸ். மீனு சர்ஜிகல் கிளினிக், காந்தி ரோடு |
| நாகப்பட்டிணம் | 20-7-50 | என். டி. சுந்தரராஜ பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| மாயவரம் | 22-7-50 | ராமகிருஷ்ண வைத்யசாலை, கிருஷ்ணாராயர் சந்து |

ஆலோசனை நேரம்: காலை 8 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

○●○

## ஜம்மி வெங்கட்டரமணய்யா & ஸன்ஸ்

மதராஸ் - 4 - திருச்சிராப்பள்ளி

---

# மிட்லண்ட் ஸினிமா

வெள்ளி 7-7-50
மகத்தான ஆரம்பம்

தினசரி 3 காட்சிகள் 3-30; 6-30 & 9-30

BATHING BEAUTY என்ற படத்தில் நடித்து ரஸிகர்களின் உள்ளங்களை கொள்ளை கொண்ட ESTHER WILLIAMS மீண்டும் விதூஷக விற்பன்னர் RED SKELTON னுடன் கூடி நடிக்கும் ஒரு ரம்மியமான படம்

The "BABY, IT'S COLD OUTSIDE" Technicolor Hit!

M-G-M's

## Neptune's Daughter

ESTHER WILLIAMS · RED SKELTON

RICARDO MONTALBAN · BETTY GARRETT

KEENAN WYNN · XAVIER CUGAT AND HIS ORCHESTRA

A METRO-GOLDWYN-MAYER PICTURE

WALTER WINCHELL says the song hit "BABY, IT'S COLD OUTSIDE" is "different and clever!"

M-G-M 25th Anniversary

நேத்திரானந்த மளிக்கும் காட்சிகள்-கர்ணாம்ருதமான கானம்-மகிழ்ச்சிதரும் ஜலக்கிரீடைகள்

For ADULTS ONLY



# ஓவல்டின்

இரவில்

**நல்ல தூக்கம்**

வர உதவுகிறது.



அதன் பயனாக

மறுநாள் உங்களுக்கு

புதிய ஜீவசக்தி

கிடைக்கின்றது!

நல்ல ஆரோக்யம் அநுப விக்க ஆழ்ந்த இயற்கை நித்திரை மிகவும் அவசியம். நீங்கள் உறங்கும்போது உங்கள் உடலுக்கும் மூளைக் கும் புதியதாகத் தெம்பு உண்டாவதுடன், நரம்பு களுக்கும் ஓய்வு கிடைக் கிறது.

'ஓவல்டின்' இவ்வாழ்ந்த நித்திரை கிடைக்க உதவுவதால் மறு நாள் புதிய பலமும் சக்தியும் கிடைக்கின்றது.

'ஓவல்டின்' ஆரோக்யத்திற்கு முக்கிய அம்சமாக விளங்குவதன் காரணம் அதிலடங்கியுள்ள இயற்கையின் மிகச்சிறந்த உணவுப் பொருள்களாகும். பழுத்த பார்லி மால்ட், உத்தமமான ஏட்டுப்பால், விசேஷமாகத் தயாரித்த கோக்கோ, இயற்கை பாஸ்படைட்டுகள்-விடமின்களே அவை. இந்த சத்துக்கள் நிறைந்த அளவு இருப்பதால் ஓவல்டின் உபயோகத்தில் மிகவும் சிக்கனமானது.

ஆழ்ந்த நித்திரைக்கும் திட ஆரோக்யத்திற்கும், இன்றே ஓவல்டின் சாப்பிட ஆரம்பியுங்கள். ஓவல்டின் என்று பெயருள்ளது ஒன்றுதான். இணையற்ற பிரத்யேக வகையைச் சேர்ந்தது.




# 'OVALTINE'

## 'ஓவல்டின்'

ஆழ்ந்த, சுகமான நித்திரை கிடைக்க

வினியோகஸ்தர்கள்:—

கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி,

(இந்தியா) லிட்.

OV. 305



மதுரை ஆர் எஸ். பதி அன் கோ., புரோப்ரைட்டர் ஸ்ரீ ஆர். சபாபதி முதலியாரின் குமாரி சௌ. பாண்டி தேவிக்கும், மதுரை ஸ்ரீ W. கண்ணப்ப முதலியாரின் குமாரர் ஸ்ரீ சி. சுந்தரேசனுக்கும் ஜூன்மீ 11உ மதுரையில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்திற்கு நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்து தம்பதிகளுக்கு ஆசி கூறினர்.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 9 இதழ் 40 | ஜூலை 9 | விக்ருதி ஆனி 25



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

ஒவ்வொரு ஸ்னானமும்
உங்களுக்குக் கொடுக்கக்கூடியது
எண்ணெய் ஸ்னானத்தின்
வழவழப்பு



கேரளா எண்ணெய் ஸ்னான சோப்பின் செழிப்பான நுரை உள்ளே நன்றாக இறங்கி உங்களுடைய சர்மத்தை சுத்தமாகவும் அதிக மிருதுவாகவும் செய்கிறது. அதன் லேசான, சுத்தமான எண்ணெய்கள் இயற்கையான வாசனைகளையும் கிருமி நாசினிகளையும் சர்மத்தின் வெகு கீழே கொண்டு போகின்றன. ஆனாலும் குளிர்ந்த ஸ்னானத்தால் உங்கள் சர்மத்திலிருந்து ஒரு விநாடியில் கேரளா நுரையைப் போக்கிவிடலாம். மேலும் புதிய மணமும் பாதுகாப்பும் கேரளா ஸ்னானத்திற்குப் பிறகு பல மணி வரையும் தங்குகின்றன.

# கேரளா ஸோப்

சுத்தமான எண்ணெயே மூலப்பொருள்



கிருமிகளைப் போக்குவதும், குளிர்ச்சி பொருந்தியதும், சர்மத்தை மிருதுவாக்குவதுமான குணங்கள் வேப் சோப்பின் மார்கோஸா அல்லது நிம் எண்ணெயால் ஏற்பட்டு முக்கியமாக உஷ்ணகாலத்தில் சௌக்கியத்தையும் சந்தோஷத்தையும் கொடுக்கக் கூடியது.

தயாரிப்பாளர்கள் —

கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட்
கள்ளிக்கோட்டை
டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்
கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற  தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 9 # கல்கி இதழ் 49

# என்ன சேதி?

## ஹோட்டல்கள் பொது விரோதிகளா?

சென்னை நகரத்தில் தினந்தோறும் ஏறக்குறைய இரண்டு லட்சம் பேர் ஹோட்டல்களில் சாப்பிடுகிறார்கள் என்று கணக்கிடப் பட்டிருக்கிறது. இதிலிருந்து ஹோட்டல்கள் எவ்வளவு முக்கியமான பொது ஜன ஊழியம் செய்து வருகின்றன என்பது தெரிய வரும். இரண்டு லட்சம் பேர் எப்படியாவது கையில் இருக்கும் பணத்தைச் செலவழித்து விடவேண்டும் என்பதற்காக ஹோட்டலில் சாப்பிடப் போக மாட்டார்கள்! அப்படியாக இந்த நாளில் பணம் யாரிடமும் மிதமிஞ்சிக் கிடக்கவும் இல்லை. முடியுமானால் கையிலுள்ள பணத்தை மிச்சம் பிடித்துச் சேர்க்கவே பார்ப்பார்கள். "பணத்தை மீத்துச் சர்க்கார் கடன் பத்திரங்களில் போடுங்கள்!" என்று எத்தனை பிரமாதமான பிரசாரம், எவ்வளவு லட்சக்கணக்கான செலவில் நடைபெற்று வருகிறது? அப்படியிருந்தும் ஜனங்கள் கையிலுள்ள பணத்தைச் சர்க்கார் கடன் பத்திரங்களிலோ, ஸேவிங்ஸ் பாங்கிகளிலோ போடாமல், ஹோட்டல்களுக்குப் போவதின் காரணம் என்ன? உயிர் வாழ்வதற்கு உணவு அருந்துதல் இன்றியமையாத அவசியமாயிருப்பதால்தான்! ஹோட்டல்களிலேயே சாப்பிட்டுத் தீரவேண்டிய நிலைமையில் சென்னையில் லட்சக்கணக்கான ஜனங்கள் இருக்கிறார்கள். உத்தியோகம் பார்ப்பவர்களும், பலவித வியாபாரங்களில் ஈடுபட்டவர்களும், மாணவர்களும், தொழிலாளிகளும் ஆயிரக் கணக்கானவர்கள் ஹோட்டலில் சாப்பிட்டே பசியாற வேண்டியவர்களாயிருக்கிறார்கள். ஆகவே, ஹோட்டல்கள் இன்றியமையாத பொதுஜன சேவை செய்து வருகின்றன என்றே சொல்ல வேண்டும். ஆயினும் நம்முடைய சென்னை மாகாண அரசாங்கத்தார் கெடுபிடியும் ஹோட்டல்கள் விஷயத்தில் கடைப்பிடித்து வரும் கொள்கைகளைப் பார்த்தால், ஹோட்டல்களைப் பொதுஜன விரோதிகள் என்று அவர்கள் கருதி வருவதாகவே தோன்றும்.

## புழுப் பூச்சிகளுக்கு விலை!

இந்த வருஷத்துச் சென்னை ஹோட்டல்காரர்களின் சங்கத்து அறிக்கையில், எப்படி நாலா பக்கங்களிலிருந்தும் இன்னல்கள் வந்து ஹோட்டல்களைத் தாக்குகின்றன என்பதை நன்றாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். வரியைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. மற்ற எந்தத் தொழிலைக் காட்டிலும் அதிகமான வரிகளுக்கு உட்படுத்தப்படும் தொழில் ஹோட்டல் தொழிலாகும். வருமான வரி, விற்பனை வரி, தொழில் வரி ஆகிய பிரம்ம ராட்சதர்களைத் தவிர கார்ப்பொரேஷன் லைஸென்ஸ் வரி, போலீஸ் லைஸென்ஸ் வரி, உணவு தானிய லைஸென்ஸ் வரி, பாக்டரி லைசென்ஸ் வரி முதலிய குட்டிப் பிசாசுகள் பல ஹோட்டல்களின் குரல் வளையைப் பிடித்து இறுக்குகின்றன. விற்பனை வரி மட்டும் மூன்று தடவை ஹோட்டல்காரர்கள் கட்டவேண்டியிருக்கிறது. "ஏதோ நம்முடைய பொது ஜன சர்க்கார்தானே ஆட்சி நடத்துகிறார்கள்; வரி வசூலித்துக் கொண்டு போகட்டும்; எப்படியாவது சுயராஜ்யம் நன்றாய் நடந்தால் சரி!" என்று மனதைத் திருப்தி செய்து கொள்ளலாம். ஆனால் அதிக வரி போட்டு வசூலிப்பதற்குத் தகுந்தாற்போல் அதிக சௌகரியங்கள் செய்து கொடுக்க வேண்டுமல்லவா? அப்படிச் செய்து கொடுக்கிறார்களா என்று கேட்டால், இந்த சோகக் கதையைக் கொஞ்சம் கேளுங்கள்:—

"சர்க்காரின் கிடங்குகளில் ஏராளமாக 'ஸேமோலினா' இருப்பதாகவும், ஹோட்டல்களுக்குத் தாராளமாக எவ்

வளவு அதிக அளவு வேண்டுமானாலும் வழங்கும்படி நகர ரேஷனிங் ஆபீஸருக்கு உத்தரவிட்டிருப்பதாகவும் சென்னைக் கலெக்டர் நமக்கு எழுதினார். ஆனால் அந்தச் சரக்கு நல்லதாக இல்லாததாலும் அதைவிட நல்ல சரக்கு சுலபமாக மார்க்கெட்டில் கிடைத்திருந்ததாலும், நமது அங்கத்தினர்கள் சர்க்கார் சரக்கை வாங்க முன்வரவில்லை. இப்பால் இந்தச் சரக்கை ரேஷன் சரக்காகத் நிர்மானித்து இதை அதிக அளவில் எல்லா ஹோட்டல்களுக்கும் கட்டாய விநியோகம் செய்தார்கள். சாப்பாடு போடாத சிற்றுண்டிச் சாலைகளுக்கு 50 சத விகிதமாக இந்த 'ஸெமோலினா'வே வழங்கப் பட்டது. இந்தச் சரக்கினால் தயாரிக்கப்பட்ட உணவைச் சாப்பாட்டு ஹோட்டல்களில் சாப்பிட வருவோருக்குக் கட்டாயமாகப் பரிமாறுவதை அவர்கள் ஏற்கவில்லை. உயர் விலையும் தரக் குறைவும் கூடிய இந்தச் சரக்கை சிற்றுண்டிச் சாலைகளிலும் அதிக அளவில் உபயோகிக்க முடியவில்லை. கனம் உணவு மந்திரி அவர்களை நாம் பேட்டி கண்டு ரேஷனில் விநியோகிக்கப்பட்டு வந்த 'ஸெமோலினா'வின் மாதிரி காண்பித்தோம். ஹோட்டல்களுக்கு சப்ளை செய்யப்பட்ட 'ஸெமோலினா' பூச்சி புழுக்களுடனும் மிகவும் கெட்டுக் கசந்து போனதாகவும் இருந்ததை எடுத்துக் கூறினோம். ரேஷன் இலாகாவோ ஹோட்டல்கள் அந்தச் சரக்கை வாங்கி உபயோகித்தே தீரவேண்டும் என்று வற்புறுத்தி வந்தார்கள். கெட்டுப்போன இந்தச் சரக்கை உபயோகித்தால் ஹோட்டல் முதலாளிகளுக்கும் வாடிக்கைக்காரர்களுக்கும் தகராறுகள் ஏற்பட்டு வருகின்றன. 'ஸெமோலினா' பொதுஜன விநியோகத்திற்கு லாயக்கற்ற நிலைமையிலிருந்ததால் ஹோட்டல்களில் ஸ்டாக் அதிகம் தங்கிப் போய்விட்டது. சர்க்காரால் வாங்கப்படும் விலையும் அதிகம். ரேஷனுக்கு உட்படாததும், இதைவிட உயர் ரகமாகவும் உள்ள சரக்கு இதைவிட மலிவான விலைக்கு வியாபாரிகளிடம் தாராளமாகக் கிடைத்து வருகிறது. இந்நிலைமையில் தனக்குத் தேவையில்லை (தான் உபயோகிக்க இயலாது) என்று சொல்லும் எந்த ஹோட்டலையும் வாங்கித்தான் ஆகவேண்டுமென்று கட்டாயப்படுத்த வேண்டாம் என்று கனம் மந்திரியாரைக் கேட்டுக் கொண்டோம். நாம் இவ்வளவு முயற்சி செய்தும், ரேஷனின் ஒரு முக்கிய அம்சமாக ஸெமோலினா இன்னும் இருந்து வருகிறது."

சென்னை ஹோட்டல்காரர் சங்கத்தின் அறிக்கையிலேதான் மேற்கண்ட சோகப் புலம்பல் காணப்படுகிறது. சர்க்கார் இயந்திரத்தைச் சேர்ந்தவர்கள் யாரோ, எந்த இடத்திலோ, தவறு செய்து விடுகிறார்கள். அந்தத் தவறின் பலன்களை மக்கள் அநுபவிக்க வேண்டி வருகிறது. உத்தரப் பிரதேச அரிசியைக் கணக்குத் தெரியாமல் அதிக விலைக்கு வாங்கி விட்டு இப்போது பொது மக்கள் தலையில் அந்த அதிக விலையைக் கட்டுகிறார்கள் அல்லவா? அதுபோலவே சர்க்கார் புழுத்துப்போன 'ஸெமோலினா'வை ஹோட்டல்காரர்களின் தலையில் கட்டுகிறார்கள். ஹோட்டல்காரர்கள் சாப்பிட வருகிறவர்களின் தலையிலே கட்டப் பார்த்து முடியாமல் கஷ்ட நஷ்டங்களை அடைகிறார்கள்!

## கடையைக் கட்டுகிறார்கள்!

ஏதாவது ஒரு பொருள் இல்லாமற் போனால்தான் அதனுடைய முக்கியத்தை மக்கள் நன்கு உணர முடிகிறது. அல்லது, இல்லாமற் போவதாகக் கற்பனை செய்து பார்க்க வேண்டும். ஒரு வார காலம் சென்னையிலுள்ள சினிமாத் தியேட்டர்களை யெல்லாம் மூடிவிட்டால் குடி முழுகிப் போய் விடாது; மக்களின் வாழ்க்கை நடந்து கொண்டுதானிருக்கும். ஒரு வார காலம் எல்லாப் பத்திரிகைகளையும் நிறுத்தி வைத்திருந்தால் வானம் இடிந்து விழுந்து விடாது. ஆனால் ஒரு வாரம் ஹோட்டல்களை யெல்லாம் மூடியிருப்பதாகக் கற்பனைசெய்து பாருங்கள்! மக்களின் வாழ்க்கை,—முக்கியமாக, நகரங்களில் வசிக்கும் வர்த்தகர்கள்—உத்தியோகஸ்தர்கள் முதலிய நடுத்தர வகுப்பாரின் வாழ்க்கை எவ்வளவு அல்லோல கல்லோலமாகி விடும்? காரியார்த்தமாக நகரங்களைத் தேடி வரும் கிராமவாசிகள்தான் எத்தனை கஷ்டப் படுவார்கள்? அவ்வளவு முக்கியமான, தற்கால சமூக வாழ்க்கைக்கு ஜீவாதாரமான,—

*அட்டைப்பட விளக்கம்*

இந்த வாரத்தில் தேசமெங்கும் குதூகலமாக வன மகோத்சவம் கொண்டாடப்படுகிறது. நாமும் நமது இந்த இதழின் அட்டையில் மரம் நாட்டும் விழா நடத்தி வன மகோத்சவம் கொண்டாடுகிறோம்.

ஹோட்டல் தொழிலை நாலாபுறத்திலும் நெருக்கி நாசமாக்குவது மிக்க அறிவீனமாகும். ஹோட்டல் சொந்தக்காரர்கள் பெரும் பணம் சேர்த்துக் கொழுத்த முதலாளிகள் ஆகி விடுவதாகச் சிலரிடம் ஒரு தப்பான எண்ணம் இருந்து வருகிறது. சென்னை மாகாணம் முழுவதும் எடுத்துக் கொண்டு பார்த்தால், இம்மாதிரி ஹோட்டல் தொழிலில் உண்மையாகப் பணம் பண்ணியவர்கள் பத்து அல்லது பதினைந்து பேருக்குள்ளேதான் இருக்கும். மற்ற மளிகை வியாபாரம், ஜவுளி வியாபாரம், இரும்பு வியாபாரம், நகை வியாபாரம் முதலியவற்றில் பணக்காரர்கள் ஆகிறவர்களோடு ஒப்பிட்டால் ஹோட்டல் தொழில் சர்வ சாதாரணம் என்று தெரியவரும். ஆயினும் வெகு காலமாக நடத்திக் கொண்டிருக்கும் தொழிலாயிற்றே என்றுதான் பலரும் இந்தக் காலத்தில் அந்தத் தொழிலை நடத்தி வருகிறார்கள். அநேகர் நிறுத்தவும் தயாராயிருக்கிறார்கள். பல ஹோட்டல்கள் விற்பனைக்கு விலை கூறப்பட்டு வருகின்றன.



வால்டார் - அஸ்டோரியா ஹோட்டல், நியூயார்க்

இதெல்லாம் கடைசியில் நடுத்தர வகுப்பாரின் தலையிலேயே வந்து விடியும் என்பதில் சந்தேகமில்லை. உண்மையில் தீர்க்க திருஷ்டியுள்ள அரசியல்வாதிகளும் தேசத் தலைவர்களும் ஹோட்டல் தொழிலுக்கு அவசியமான எல்லா உதவிகளையும் செய்து ஆதரிக்க முன் வர வேண்டும்.

## அமெரிக்காவின் உதாரணம்

பல காரியங்களுக்கு நாம் இப்போது அமெரிக்காவின் உதாரணத்தைப் பார்த்துக் கொள்கிறோம். கொரியா யுத்தத்திலே கூட அமெரிக்கா இறங்கிய வழியிலேயே இந்தியாவும் இறங்கி யிருக்கிறதல்லவா? அமெரிக்காவில் ஹோட்டல் தொழில் மற்ற எல்லாத் தொழில்களையும் விடப் பெரிய தொழிலாக விளங்கி வருகிறது. நியூயார்க் நகரிலுள்ள 'வால்டார் - அஸ்டோரியா' ஹோட்டலின் படத்தை இங்கே பாருங்கள். இது 47 மாடி உள்ள கட்டிடம். மொத்தம் 2,200 அறைகள் இதில் இருக்கின்றன. தினசரி வருமானம் ஐம்பதினாயிரம் டாலர்! அதாவது இரண்டேகால் லட்சம் ரூபாய்! இவ்வளவு பெரிய தொழிலாயிருக்கிறதே என்று அதை நாலாபுறமும் நெருக்க அமெரிக்க அரசாங்கம் முயலுவதில்லை. அமெரிக்கப் பிரஸிடெண்ட் நியூயார்க் நகரம் வந்தால் இந்த ஹோட்டலிலேதான் இறங்குகிறார்! வெளி நாடுகளிலிருந்து வின்ஸ்டன் சர்ச்சில், டியூக் ஆப் விண்ட்ஸர் முதலிய பிரமுகர்கள் வந்தால் சர்க்கார் விருந்தாளிகளாக இந்த ஹோட்டலிலே தான் இறக்கப்படுகிறார்கள்! இவ்வளவு பிரமாண்டமான முறையில் ஹோட்டல் தொழில் நம் நாட்டில் விருத்தி யடையும் என்று கனவு காண்பதற்கும் இல்லை. ஆயினும் ஏதோ இப்போ திருக்கும் ஹோட்டல் வசதிகளுக்காவது குறைவு ஏற்படாமல் நம்முடைய சர்க்கார் பார்த்துக் கொண்டால் அதுவே பெரிய பொதுஜன உபயோகமா யிருக்கும்.

# “மரம் நட்டவன் தண்ணீர் விடுவான்”















வர்த்தக மந்திரி ஸ்ரீ பிரகாசா கிணற்றிலிருந்து கஷ்டப்பட்டுத் தண்ணீர் இறைப்பார்!


அவரைத் தொந்தரவு செய்யாதீர்கள். இந்தத் தேகப்பயிற்சி அவருக்கு நல்லது.


அதிக வேலையில் ஆழ்ந்திருக்கும் ஆரோக்கிய மந்திரி ராஜகுமாரி அமிருத் கௌர் செடியை மேஜைமீது வைத்துக் கொண்டே தண்ணீர் ஊற்றுவார்.


தேக அசௌக்கியமாக இருக்கும் கல்வி மந்திரி மௌலானா ஆஸாத் செடியைக் கொண்டு வரச் சொல்லி டம்ளரில் எடுத்துத் தண்ணீர் விடுவார்.


"மந்திரி சபைக் கூட்டத்துக்கு வாருங்கள்"
அதெல்லாம் முடியாது! செடி காய்ந்து விட்டது. தண்ணீர் விட்டு விட்டுத் தான் வருவேன்!


ஸ்ரீமதி குட்டியம்மாளு அம்மாள் பல வருஷங்களாகத் தாம் நட்டுள்ள செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றப் பல குடங்களை எடுத்துச் செல்வார்!


வேட்டையில் பிரியமுள்ள சென்னைக் கவர்னர் செடிக்குத் தண்ணீர் விடும் போது, இம் மாதிரி ஆபத்து வந்தாலும் வரலாம்!

# தேர்தலும் திட்டமும்

தீபம் ஒளி குன்றாமல் நன்றாக எரிவதற்குத் தூண்டு கோல் அவசியம் அல்லவா? அதுபோலவே, எவ்வளவு சிறந்த கட்சியாயினும் அதன் உழைப்பும் ஊக்கமும், ஒழுக்கமும் திறமையும் குன்றாமல் இருப்பதற்குத் தூண்டு கோல் இருக்க வேண்டியது அவசியம் என்பதை மறுப்பதற்கில்லை.

எந்த நாடாயினும் அங்கு அதிகாரத்தில் இருக்கும் கட்சி, அதாவது அந்த நாட்டின் நிர்வாகத்தை ஏற்று நடத்தும் கட்சி தீபமாகவும், எதிர்க்கட்சிகள் அத்தகைய சர்க்காரின் குற்றம் குறைகளையும் தவறுகளையும் அந்தரங்க சுத்தியுடன் எடுத்துக் கூறி அவர்களைச் சரியான பாதையில் நடத்தும் தூண்டு கோலாகவும் இருக்க வேண்டும்.

அவ்வாறாக, உண்மையான ஜனநாயகத்தில் நேர்மையான எதிர்க்கட்சிகளுக்கு இடம் உண்டு என்பதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

எனினும் சர்க்காருக்கு எதிராக இருக்கும் கட்சிகள், தேச நலன்களுக்கும் எதிராக இருந்து கொண்டு பாதகமான காரியங்களைச் செய்யுமாயின் அது உண்மையான எதிர்க்கட்சியாக இருக்க முடியாது. நாட்டின் நிர்வாகத்தை நடத்தும் ஜனநாயக சர்க்கார் அத்தகைய கட்சிகளைச் சகித்துக் கொண்டிருக்கவும் முடியாது.

எனவே, தேச மக்களுக்குச் சகிப்புத் தன்மையைப் போதித்த காந்தி மகானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றும் காங்கிரஸ் சர்க்கார் எதிர்க்கட்சிகளிடம் சகிப்புத் தன்மை காட்டவில்லை என்று கூறப்படும் புகார் ஆதாரமற்றது.

காங்கிரஸ் சர்க்கார் எதிர்க் கட்சிகளின் சுதந்திரத்துக்கு எவ்விதத்திலும் முட்டுக்கட்டை போட விரும்பவில்லை என்பது, பம்பாயில் சென்ற வாரம் நடந்த பல்வேறு எதிர்க்கட்சிகளும் அடங்கிய கதம்ப மகாநாட்டிலிருந்து நன்கு தெரிகிறது.

சோஷலிஸ்டுக் கட்சித் தலைவர் ஸ்ரீ ஜெயப்பிரகாச நாராயண் கூட்டிய மேற்படி மகாநாட்டில் ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டு, அதை ஜனாதிபதி பாபு ராஜேந்திரப்பிரசாதுக்கும் அனுப்புவதென்று தீர்மானித்திருக்கிறார்கள்.

வரப்போகும் தேர்தல்கள் யாருடைய சுதந்திரத்தையும் கட்டுப் படுத்தாமலும் நேர்மையாகவும் நடைபெற வேண்டும் என்பதே அவர்களுடைய திட்டத்தின் நோக்கமாகும்.

பம்பாய் மகாநாட்டுக்குத் தலைமை வகித்த டாக்டர் ரகுநாத பராஞ்சிபே, பிரஞ்சு இந்தியாவில் நடைபெறும் தேர்தல்களைப் போல் குடியரசு இந்தியாவில் நடைபெறும் தேர்தல்களும் ஊழல் மயமாகி விடக்கூடாது என்று சர்க்காரை எச்சரித்தார்.

பிரஞ்சு இந்தியாவிலும் காஷ்மீரத்திலும் சர்வஜன வாக்கு எடுப்பு ஊழல்களின்றி நேர்மையாக நடைபெற வேண்டும் என்று இந்திய சர்க்கார் வற்புறுத்தி வருவதை அறியாதவர்கள் இருக்க முடியாது.

எனவே, தேர்தல்கள் நெறி தவறாமலும் நேர்மையுடனும் நடைபெற வேண்டும் என்பதில் எதிர்க்கட்சிகளைக் காட்டிலும் காங்கிரஸ் சர்க்காருக்கு அதிக அக்கறை உண்டு.

வாக்காளர் ஜாப்தாக்களைப் பரிசோதனை செய்ய வேண்டும் என்றும், விடப்பட்ட வாக்காளரின் பெயர்களை மீண்டும் ஜாப்தாவில் சேர்க்க ஏற்பாடுகள் செய்யவேண்டும் என்றும், மற்றும் பல யோசனைகளையும் எதிர்க்கட்சிகளின் மகாநாட்டில் பிரமுகர்கள் வற்புறுத்தியிருக்கிறார்கள்.

இதெல்லாம் எதிர்க் கட்சிகள் புதிதாகக் கூறும் அபூர்வ யோசனைகள் அல்ல. ஏற்கெனவே காங்கிரஸ் சர்க்கார் அவ்விஷயங்களை யொட்டி தகுந்த ஏற்பாடுகளைச் செய்து வருகிறார்கள்.

இந்தியா சர்க்கார் நியமித்துள்ள பிரதம தேர்தல் கமிஷனர் ஸ்ரீ எஸ். சென் ஒவ்வொரு மாகாணத்துக்கும் சென்று பல்வேறு கட்சியினரையும் பிரமுகர்களையும் நேரில் கண்டு அவர்கள் கூறும் உற்ற யோசனைகளை ஏற்றும் ஆட்சேபணைகளுக்குத் தகுந்த சமாதானம் கூறியும் வருகிறார்.

அதிலிருந்து, இந்திய சர்க்கார் பாரபட்சமின்றிச் சகலருடைய ஒத்துழைப்பையும் நாடுகிறார்கள் என்பது சந்தேகமின்றித் தெரிகிறது.

• • •

"குடியரசு இந்தியாவின் புதிய அரசியல் திட்டத்தின்படி 1951-ம் வருஷம் ஜனவரி மாதத்துக்குள் வாக்

காளர்களின் ஜாப்தா தயாராகிவிடும். எவ்விதத்திலும் குடியரசு இந்தியாவின் முதலாவது பொதுத் தேர்தல் அந்த வருஷம் மே மாதத்துக்கு மேல் ஒத்தி வைக்கப்பட மாட்டாது."

இவ்வாறு பிரதம தேர்தல் கமிஷனர் ஸ்ரீ சென் உறுதியாக அறிவித்திருப்பதால், பாரத நாட்டு மக்களின் வாக்குரிமையை அடிப்படையாகக் கொண்ட பூரண ஜனநாயக சர்க்கார் அநேகமாக அடுத்த வருஷத்தில் ஏற்பட்டு விடலாம். உலகத்திலேயே சீனாவுக்கு அடுத்தபடியாக அதிக வாக்காளர்கள் உள்ள நாடு இந்தியாதான். நமது நாட்டில் புதிய அரசியல் திட்டத்தின்படி வயது வந்த எல்லோருக்கும் வாக்குரிமை கிடைத்திருக்கிறது. எனவே, தேர்தல் ஜாப்தாவில் பதினேழு கோடி வாக்காளர்கள் இருக்கிறார்கள்.

மேற்படி ஜாப்தாவைத் தயாரிப்பதோ, அதில் குற்றங் குறைகள் தவறுகள் இராமல் பார்த்துக் கொள்வதோ, புகார்களுக்கு இடமின்றித் தேர்தல்களை நடத்துவதோ எவ்வளவு பிரமாதமான காரியம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

பொதுத் தேர்தல்களின் நோக்கம் என்ன? ஜனங்களுக்காக ஜனங்களால் ஜனங்களுடைய அரசாங்கம் ஏற்பட வேண்டும் என்பதுதான்.

எனவே, ஜனங்களின் ஒத்துழைப்பு இல்லாமல் தேர்தல்களை ஒழுங்காகவும் நேர்மையாகவும் நடத்துவது யாராலும் முடியாத காரியம்.

புதிய அரசியலின்படி குடியரசு சர்க்காரைச் சிருஷ்டிக்கும் உரிமையும் சக்தியும் ஜனங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. அந்த உரிமையை, சக்தியைப் பொதுஜனங்கள் விவேகத்துடன் உபயோகித்தால் தேச க்ஷேமத்தில் கருத்துக்கொண்டு ஜனங்களுக்கு உண்மையான தொண்டு புரியும் ஜனநாயக சர்க்காரை ஏற்படுத்திக் கொள்ளலாம்.

* * *

இதைத் தவிர, சோஷலிஸ்டு கட்சியினர் இந்தியாவின் புனருத்தாரணத்துக்காகப் பதினெட்டு விஷயங்கள் அடங்கிய ஒரு நீண்ட திட்டத்தைத் தயாரித்திருக்கிறார்கள்.

சென்னையில் நடைபெறும் சோஷலிஸ்டுக் கட்சியின் மகாநாட்டில் மேற்படி திட்டம் ஆலோசனைக்கு வரும்.

அந்தத் திட்டத்தில் புதிய அம்சம் எதுவும் இல்லை. "இந்திய மக்களின் வறுமை ஒழிய வேண்டும்; கிராமங்களைப் புனருத்தாரணம் செய்யவேண்டும்; கைத்தொழில்கள் அபிவிருத்தியடைய வேண்டும்; வர்த்தகம் பெருக வேண்டும்; விலைவாசிகள் குறைய வேண்டும்; பிளாக் மார்க்கெட் ஒழிய வேண்டும்; வேலையில்லாக் கஷ்டத்துக்குப் பரிகாரம் தேடவேண்டும்; லஞ்ச ஊழல்கள் தொலையவேண்டும்; கட்டாயக் கல்வி முறை ஏற்பட வேண்டும்; ஜனங்களின் சுதந்திர உரிமைகளுக்கு எவ்விதக் கட்டுப்பாடும் இருக்கக் கூடாது." இவை போன்ற பல விஷயங்கள் அந்தத் திட்டத்தில் அடங்கியிருக்கின்றன.

ஏற்கெனவே, காங்கிரஸ் தயாரித்துள்ள திட்டமும் அதுதான். அத்தகைய மகோன்னத நிலைமை நாட்டில் ஏற்பட வேண்டும் என்பதற்காகவே காங்கிரஸ் சர்க்கார்கள் பெரு முயற்சி செய்து வருகிறார்கள்.

அற்புதமான திட்டங்களைத் தயாரிப்பது சுலபம்; ஆனால் அதிலுள்ள விஷயங்களைக் கிரியாம்சையில் நிறைவேற்றினாலன்றி நாடு சுபிட்சம் அடைவது சாத்தியமா?

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

## தமிழ் எழுத்தாளருக்கு ஒரு சந்தர்ப்பம்

- பதினெட்டு தேசங்களைச் சேர்ந்த பிரசித்தமான பத்திரிகைகள் ஒத்துழைத்து அகில உலகச் சிறு கதைப் போட்டி ஒன்று நடத்துகிறார்கள்.
- இந்த முயற்சியை ஆரம்பித்த பத்திரிகை நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்.
- இந்தியா தேசத்தில் மேற்படி சிறு கதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புதுடெல்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக்கொண்டிருக்கிறது.
- இந்தியாவின் முக்கியமான பதினொரு பாஷைகளிலாவது ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் தமிழ் எழுத்தாளர்கள் இந்த உலகச் சிறு கதைப் போட்டியில் கலந்து கொள்ளலாம்.
- இந்தியா தேசத்தில் எழுதப்படும் கதைகளில் சிறந்த எட்டு கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 3,750 பரிசு அளிக்கிறது. இதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அகில உலகப் போட்டிக்கு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் இரண்டு அல்லது மூன்று கதைகள் பொறுக்கி அனுப்பப்படும். இப்படி மொத்தம் சேரும் 52 கதைகளில் எல்லாவற்றிலும் சிறந்த கதைக்கு "நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்" பத்திரிகை ஐயாயிரம் டாலர் (ரூ. 22,250) பரிசு அளிக்கும்.
- மேற்படி அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குத் தமிழ் நாட்டிலிருந்து கதைகளைச் சேகரிக்கும் பொறுப்பைக் "கல்கி" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- சிறு கதைகள் சுமார் மூவாயிரம் வார்த்தைகள் அடங்கியதாக இருப்பது நலம். நாலாயிரம் வார்த்தைகளுக்கு மேலே போகக் கூடாது.
- 1950–ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 31-ந்தேதிக்குள் மேற்படி சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- தமிழ்க் கதைகளை அனுப்ப வேண்டிய விலாசம்:– ஆசிரியர், "கல்கி" கீழ்ப்பாக்கம், சென்னை.
- தயவு செய்து உறையின் மேல் "அகில உலகச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தகுந்த நீதிபதிகளை நியமனம் செய்வார்.
- பரிசுக்காகத் தெரிந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியான கதைகள் "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அப்படிப் பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 50 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்பவேண்டும். திருப்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.




**6**

"நெருப்பு" என்ற சத்தத்தைக் கேட்டு மூளை குழம்பி நின்ற செங்கோடனுக்குச் சட்டென்று தான் செய்ய வேண்டியது இன்னதென்று புலப்பட்டுவிட்டது. சினிமாப் பார்த்தவர்கள் எல்லாரும் கூடாரத்திலிருந்து வெளியேற முயன்று கொண்டிருக்தார்கள் அல்லவா? செங்கோடன் அதற்கு மாறாகக் கூடாரத்தின் பின்பக்கம் நோக்கி ஓடினான். வழியில் அங்கங்கே நின்றுகொண்டிருந்த ஜனங்களை இடித்துத் தள்ளிக்கொண்டுப் ஓடினான். வழியில் இருந்த மரச் சட்டங்கள் முதலிய தடங்கல்களைத் தவிடுபொடி யாக்கிக்கொண்டு ஒரே மூச்சில் ஓடிப் பின்புறத்தில் நாற்காலிகள் போட்டிருந்த இடத்தை அடைந்தான். "நெருப்பு" என்ற கூச்சல் எழுந்ததும் மின்சார இயந்திரத்தை நிறுத்திவிட்டிருந்தார்கள். ஆகையால் கூடாரத்துக்கு வெளியில் இருந்த விளக்குகளும் அணைந்து போயிருந்தன. எங்கேயோ ஒரு மூலையில், டிக்கட் விற்பனை செய்யப்பட்ட இடத்தில், நெருப்புப் பற்றி எரிந்ததினால் உண்டான மங்கலான வெளிச்சம் கொஞ்சம் தெரிந்தது. அந்த இடத்தைச் சுற்றிலும் ஏகப்பட்ட ஜனங்கள் கும்பல் கூடி நின்று 'காச்சு மூச்சு' என்று சத்தம் போட்டுக்கொண்டிருந்தார்கள். அந்த இடம் செங்கோடனுடைய கவனத்தை ஒரு கணம் கவர்ந்தது. ஆனால் ஒரு கணம் மாத்திரந்தான். உடனே அவன் இத்தனை அவசரமாக ஓடி வந்ததின் காரணம் இன்னதென்பதை ஞாபகப்படுத்திக் கொண்டான். அவன் நின்ற இடத்தில் அங்கு மிங்குமாகச் சிலர் ஓடிக்கொண்டிருந்தார்கள். அவர்களில் பெண்பிள்ளைகளும் இருந்தனர்; புருஷர்களும் இருந்தனர். அவர்களில் குமாரி பங்கஜா இருக்கிறாளா? அவளை அந்த இருட்டில் எப்படித் தேடிக் கண்டு பிடிப்பது? ஆனால் அப்படித் தேடிக் கண்டு பிடிக்கும் சிரமம் செங்கோடனுக்கு ஏற்படவில்லை. ஓடிக் கொண்டிருந்தவர்களில் ஒரு ஸ்திரீ அவன்மீது முட்டிக்கொள்ளவே, செங்கோடன் அவளுடைய தோள்களைப் பிடித்து நிறுத்தி முகத்தை உற்றுப் பார்த்தான். அதிர்ஷ்டம் என்றால் இதுவல்லவா அதிர்ஷ்டம்? கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது மல்லாமல் பக்தன் மேலேயே வந்து முட்டிக்கொண்டது! அவள் குமாரி பங்கஜாதான் என்று அறிந்ததும் செங்கோடன் பரவசமடைந்தான். அவளைக் காப்பாற்றுவதற்கு வழி என்ன? தூரத்தில் தெரிந்த நெருப்பு அப்போது குப்பென்று பற்றிப் பெரு நெருப்பா

வது போலத் தோன்றியது. செங்கோடன்மீது முட்டிக்கொண்ட பங்கஜாவோ அவன் இன்னான் என்பதைத் தெரிந்து கொள்ளாமல் "ஐயோ!" "ஐயோ!" "என்னை விடு!" என்று அலறினாள். "நான்தான் ராஜா செங்கோடக் கவுண்டன்! பயப்படாதே! உன்னை நான் காப்பாற்றுகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே, சிறு குழந்தையைத் தூக்குவதுபோல் செங்கோடன் குமாரி பங்கஜாவைக் குண்டுக் கட்டாகத் தூக்கிக் கொண்டு கூடாரத்திலிருந்து வெளிப் பக்கம் நோக்கி ஓடினான். குமாரி பங்கஜா கால்களை உதைத்துக் கொண்டாள். கைகளினால் அவனுடைய மார்பைக் குத்தித் தள்ளினாள். கீழே குதிக்க முயன்றாள். ஒன்றும் பலிக்கவில்லை. செங்கோடக் கவுண்டனுடைய இரும்புக் கைகளின் பிடியிலிருந்து அவள் தப்ப முடியவில்லை.

கூடாரத்துக்கு வெளியில் அவளைக் கொண்டு வந்ததும் செங்கோடன் தானாகவே அவளைக் கீழே இறக்கிவிட்டான். "பயப்படாதே! நான் இருக்கும்போது பயம் என்ன?" என்றான். அதற்குப் பதிலாகக் குமாரி பங்கஜா அவனது வலது கன்னத்தில் ஓங்கி ஒரு அறை விட்டாள்.

மிக்க பலசாலியான செங்கோடனுக்கு அந்த அடியினால் கன்னத்தை வலிக்கவில்லை; ஆனால் நெஞ்சில் கொஞ்சம் வலித்தது! அவனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. கன்னத்தைத் தடவிக் கொண்டே நின்றான்.

திடீரென்று கூடாரத்துக்கு வெளியே விளக்குகள் பிரகாசமாக எரியத் தொடங்கின.

தன் எதிரில் நின்றதும், தன் கன்னத்தில் அறைந்ததும், குமாரி பங்கஜாதான் என்பதைச் செங்கோடன் இன்னொரு தடவை நல்ல வெளிச்சத்தில் பார்த்துச் சந்தேகமறத் தெரிந்து கொண்டான். அதைப் பற்றி அவளைக் கேட்கவேண்டும் என்று மனம் விரும்பியது. "உன் உயிரைக் காப்பாற்றினேன். உன்னுடைய பூப்போன்ற மேனியில் நெருப்புக் காயம் படாமல் தப்புவித்தேன். அதற்கு நீ எனக்குக் கொடுத்த பரிசு கன்னத்தில் அறைதானா?" என்று கேட்க அவன் விரும்பினான். ஆனால் நாவில் வார்த்தை ஒன்றும் வரவில்லை. பங்கஜாவின் முகத்தைப் பார்த்துக் கொண்டே பிரமை பிடித்தவன் போல நின்றான்.

அப்போதுதான் குமாரி பங்கஜா அவனை உற்றுப் பார்த்தாள். "ஓகோ! நீயா? நீதானா இப்படிப்பட்ட அக்கிரமம் பண்ணினாய்? இப்படிப் பண்ணலாமா?" என்றாள்.

செங்கோடன் அதற்குப் பதில் சொல்வதற்குள் "பங்கஜா! பங்கஜா!" என்ற குரல் கேட்டது.

"இதோ இருக்கிறேன், அண்ணா!"

திடு திடு வென்று ஏழெட்டுப் பேர் ஓடிவந்து அவர்கள் இருவரையும் சூழ்ந்து கொண்டார்கள். ஏதேதோ பேசிக் கொண்டார்கள்.

"இந்தத் தடியன்தானா கலாட்டா ஆரம்பித்தது?"

"ஆமாம்! இவனேதான்!"

"குறவனைப் போல் 'விழித்துக் கொண்டு நிற்கிறதைப் பார்!"

"படம் ஆரம்பித்ததிலிருந்து இவன் குட்டி போட்ட பூனை மாதிரி அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்தான். அப்போதே சந்தேகப்பட்டேன்."

"ஏண்டா, தடியா! படம் பார்க்க வந்தயா? கலாட்டா பண்ண வந்தயா?"

"போலீஸ் கான்ஸ்டேபிள்! இங்கே சீக்கிரம் வாருங்கள்! இந்த ரௌடியை அரெஸ்ட் செய்யுங்கள்!"

"பங்கஜா! இன்று சாயங்காலம் உன்னிடம் கயவாளித்தனமாகப் பேசினான் என்று சொன்னாயே, அந்த மனிதன் இவன்தானே?"

இப்படியெல்லாம் அவனைச் சுற்றி யார் யாரோ, என்னென்னமோ பேசிக் கொண்டது செங்கோடனுடைய காதில் விழுந்தது. ஆனால் அவனுடைய மனதிலே ஒன்றும் பதியவில்லை; அவர்களுடைய பேச்சு அவனுக்குப் புரியவும் இல்லை. தன்னைப் பற்றியா இப்படியெல்லாம் பேசுகிறார்கள்? தன்னை எதற்காக 'அரெஸ்ட்' செய்ய வேண்டும் என்கிறார்கள்? தான் செய்த குற்றம் என்ன? ஒரு பெண் பிள்ளையை நெருப்பிலிருந்து காப்பாற்றியது குற்றமா? இதென்னடா வம்பா

யிருக்கிறதே? பின்னையார் பிடிக்கக் குரங்காக முடிந்ததே?

அப்போது குமாரி பங்கஜா யாரோ ஒருவனுடைய கையைப் பிடித்துக் கொண்டு, "ஸார்! இப்படிக் கொஞ்சம் தனியே வாருங்கள்! ஒரு விஷயம்!" என்று சொல்லி, அவனை அப்பால் அழைத்துக் கொண்டு போனதைச் செங்கோடனுடைய கண்கள் கவனித்தன. துரைமாதிரி உடுப்புத் தரித்த அந்த மனிதன் யார்?—யாரோ பெரிய உத்தியோகஸ்தன் போலிருக்கிறது. எதற்காகப் பங்கஜா அவனை அவ்வளவு அருமையாக அழைத்துப் போகிறாள்? அவனிடம் இரகசியமாக என்ன விஷயம் சொல்லப் போகிறாள்? போகும்போது அவள் தன்னை ஒரு தடவை நிமிர்ந்து பார்த்துப் புன்சிரிப்புச் சிரித்து விட்டுப் போனதின் காரணம் என்ன? தன்னைப் பற்றி அந்த மனிதனிடம் ஏதோ சொல்லப் போகிறாள்போலிருக்கிறது. நல்லது சொல்லப் போகிறாளோ? அல்லது கெட்டது சொல்லப் போகிறாளோ?

இதற்குள் ஒரு போலீஸ் கான்ஸ்டேபிள் அங்கே வந்து சேர்ந்தான். அவனைப் பார்த்ததும் செங்கோடனுடைய மார்பு பதைபதைத்தது. நெஞ்சு தொண்டைக்கு வந்தது. உடம்பு வியர்த்தது. சிவப்புத் தலைப்பாகை ஆசாமிகள் இருக்குமிடத்துக்குச் சமீபத்திலேயே செங்கோடன் போவது கிடையாது. ஆகா! போலீஸ்காரர்கள் பொல்லாதவர்கள். ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லிப் பணம் பறிக்கப் பார்ப்பார்கள். செங்கோடனுக்கோ பணம் என்றால் உயிர். ஆகையால் எங்கேயாவது அவன் போகும் சாலையிலே போலீஸ்காரன் நின்றால், செங்கோடன் சாலையை விட்டிறங்கித் தூரமாக விலகிப் போய் ஒரு பர்லாங்கு தூரத்துக்கு அப்பால் மறுபடியும் சாலையில் ஏறுவான்!

இப்போது ஒரு போலீஸ்காரன் தலையில் சிவப்புத் தொப்பியும் குண்டாந் தடியுமாகச் செங்கோடனை நெருங்கி வந்து கொண்டிருந்தான்! தப்பித்துக் கொண்டு ஓடலாமென்று பார்த்தால் சுற்றிலும் ஜனக்கூட்டமாயிருந்தது. ஆனால் எதற்காக அவன் ஓடவேண்டும்? அவன் செய்த குற்றந்தான் என்ன? அதைத்தான் தெரிந்து கொள்ளலாமே?

அந்தப் போலீஸ்காரனுடைய ஒரு கையில் குண்டாந் தடி இருந்தது. இன்னொரு கையில் ஒரு ஹரிகேன் லாந்தர் இருந்தது. அது செங்கோடனுடைய ஹரிகேன் லாந்தர்! டிக்கெட் வாங்கிய இடத்தில் அவன் விட்டு விட்டு வந்த லாந்தர்! அது எப்படி இந்தப் போலீஸ்காரன் கைக்கு வந்தது! ஆ! இதில் ஏதோ மர்மம் இருக்கிறது! தனக்கு ஏதோ ஆபத்து அதன்மூலம் வரப்போகிறது!

போலீஸ்காரன் "விலகுங்கள்!" "விலகுங்கள், ஐயா!" என்று மற்றவர்களை அதட்டி விலக்கிக் கொண்டே செங்கோடனின் அருகில் வந்தான்.

"ஏண்டாப்பா! என்ன கலாட்டா பண்ணுகிறாய்?" என்று அவன் செங்கோடனைப் பார்த்துக் கேட்டான்.

செங்கோடனுக்கு வார்த்தை சொல்லும் சக்தி வந்தது. ஒரு முரட்டுத் தைரியமும் பிறந்தது.

"என்னைக் கேட்கிறீர்களா? நான் ஒரு கலாட்டாவும் பண்ணவில்லை. கலாட்டா என்றால் கறுப்பா, சிவப்பா என்றே எனக்குத் தெரியாது!"

"பின்னே எதற்காக இங்கே இவ்வளவு கூட்டம் கூடியிருக்கிறது?"

"எல்லாரும் ஸினிமாப் பார்க்க வந்தவர்கள் போலத் தோன்றுகிறது. வேண்டுமானால் கேட்டுப் பாருங்கள்!"

"வெகு கில்லாடித்தனமாய்ப் பேசுகிறாயே? ஒண்ணாம் நம்பர் ரௌடி போலிருக்கிறதே!" என்றான் போலீஸ் கான்ஸ்டேபிள்.

பக்கத்தில் நின்றவர்கள் தலைக்கு ஒன்று சொல்லத் தொடங்கினார்கள்.

"இந்தத் திருட்டுப் பயலை விடாதீர்கள், ஸார்!"

"இருட்டிலே இவன் ஒரு பெண் பிள்ளையின் கழுத்துச் சங்கிலியை அறுக்கப் பார்த்தான்!"

"கழுத்துச் சங்கிலியை அறுக்கப் பார்த்தானா? அல்லது கழுத்தையே அறுக்கப் பார்த்தானா?"

"முழிக்கிற முழியைப் பார்த்தால் தெரியவில்லையா? எது வேணுமானாலும் செய்யக் கூடியவன் என்று?"

"நீங்கள் எல்லாரும் கொஞ்சம் சும்மா இருங்கள். நான் பார்த்துக் கொள்கிறேன். உங்கள் கலாட்டாவே பெரிய கலாட்டாவா யிருக்கிறது!" என்றான் போலீஸ்காரன்.

இதற்குள் குமாரி பங்கஜா சற்று முன் கையைப் பிடித்து அழைத்துப் போன மனிதர் திரும்பி வந்தார். அவரைத் தொடர்ந்து சிறிது தூரத்தில் பங்கஜாவும் வந்து தனியாக நின்றாள்.

"இதோ ஸினிமா மானேஜர் வந்து விட்டார்! அவரையே கேளுங்கள்!" என்றான் கூட்டத்தில் ஒருவன்.

ஸினிமா மானேஜர் வந்து போலீஸ்காரன் காதில் ஏதோ சொன்னார். அவன் உடனே, "நீங்கள் எல்லோரும் உள்ளே போங்கள்! படம் மறுபடியும் காட்டப்போகிறார்கள்!" என்றான்.

"நெருப்பு அணைந்துவிட்டதா, ஸார்! சேதம் ஒன்றுமில்லையே?" என்று ஒருவன் கேட்டான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இந்த ஹரிகேன் லாந்தரில் எண்ணெய் ஆகிப் போய்விட்டது. அணையும்போது திரி 'குப்'பென்று எரிந்தது. அதைப் பார்த்து விட்டுத்தான் யாரோ 'நெருப்பு' 'நெருப்பு' என்று கூச்சல் போட்டுக் கலாட்டா பண்ணிவிட்டார்கள். உள்ளே போங்கள்! படம் ஆரம்பமாகப் போகிறது!"

உண்மையாகவே, படம் ஆரம்பிப்பதற்கு அறிகுறியாகக் 'கிணு கிணு' வென்று மணி அடித்தது.

எல்லாரும் அவசர அவசரமாக உள்ளே போனார்கள்.

செங்கோடன், போலீஸ்காரன், ஸினிமா மானேஜர், குமாரி பங்கஜா, இவர்கள் மட்டும் பாக்கியிருந்தார்கள்.

"அடே! உன் பெயர் என்ன?" என்று போலீஸ்காரன் அதட்டிக் கேட்டான்.

"என் பெயர் செங்கோடக் கவுண்டன். எதற்காகக் கேட்கிறீங்க!"

"சொல்லுகிறேன். அவசரப்படாதே! இந்த லாந்தர் யாருடையது?"

"என்னுடையதுதானுங்க!"

"இதை நீ எங்கே வைத்துவிட்டு வந்தாய்?"

"டிக்கட் வாங்குகிற இடத்திலே விட்டு விட்டு வந்தேன். ஏனுங்க? இதை யாராவது களவாடிக் கொண்டு போகப் பார்த்தானா?"

"இந்த ஓட்டை லாந்தரை எவன் களவாடப் போகிறான்?"

"உங்களுக்கு இந்த ஊர் சமாசாரம் தெரியாதுங்க. நீங்கள் இந்த ஊருக்குப் புதிது போலிருக்கிறது. இந்த ஊரிலே ஓட்டை லாந்தரையும் திருடுவாங்க! உங்களையே கூடத் திருடிக் கொண்டு போய் விடுவாங்க!"

"அடே அதிகப்பிரசங்கி! வாயை மூடுகிறாயா? இல்லையா?" என்று சொல்லிக் கொண்டு போலீஸ்காரன் தன் கையிலிருந்த தடியை ஓங்கினான்.



செங்கோடனுடைய கோபம் எல்லை கடந்தது. அடுத்த நிமிஷம் அவனுக்கும் போலீஸ் ஜவானுக்கும் துவந்த யுத்தம் ஆரம்பமாகியிருக்கும். நல்ல வேளையாக, குமாரி பங்கஜா அச்சமயம் குறுக்கிட்டாள்.

"கான்ஸ்டேபிள், ஸார்! அவர் மேலே ஏன் கோபித்துக் கொள்ளுகிறீங்க! அவர்மேல் குற்றம் ஒன்றுமில்லையே?" என்றாள்.

"இவ்வளவு பெரிய இடத்திலேயிருந்து சிபார்சு வந்த பிறகு நான் என்ன செய்கிறது?" என்றான் போலீஸ்காரன்.

ஸினிமா மானேஜர், "ஆமாம், கான்ஸ்டேபிள்! இன்றைக்கு இங்கே ஒன்றும் வேண்டாம். மறுபடியும் ஏதோ கலாட்டா என்று எண்ணிக் கொண்டு ஸினிமா பார்க்கும் ஜனங்கள் கலைந்து விடுவார்கள்! இவனுடைய லாந்தரை இவனிடம் கொடுத்து விடுங்கள்!" என்றார்.

"விஷயத்தைச் சொல்லிக் கொடுப்பது நல்லது!" என்றாள் பங்கஜா.

"அவசியம் சொல்ல வேண்டியதுதான். அப்பனே! இந்த லாந்தரை நீ அணைக்காமல் டிக்கட் கொடுக்கும் இடத்தில் வைத்துவிட்டு வந்துவிட்டாய். யாரோ ஒருவன் சுருட்டுப் பற்றவைப்பதற்காக லாந்தரின் கண்ணாடியைக் கழட்டித் தூக்கியிருக்கிறான். அப்போது திரி 'புஸ்' என்று எரிந்து பக்கத்திலுள்ள தட்டிப் பாயில் பிடித்துக் கொண்டது! அதனால்தான் இவ்வளவு காபராவும்!" என்றார் ஸினிமா மானேஜர்.

"இந்தா, அப்பா! உன் லாந்தரை வாங்கிக் கொள். வேறெங்கேயும் வைக்காமல் உன் பக்கத்திலேயே வைத்துக் கொண்டு, பாக்கி ஸினிமாவையும் பார்த்துவிட்டுப் போ!" என்றான் போலீஸ்காரன்.

செங்கோடன் கை நீட்டி லாந்தரை வாங்கிக் கொண்டான். ஸினிமாக் கொட்டகையிலிருந்து வெளியேறும் திசையை நோக்கி விடு விடு என்று நடக்கத் தொடங்கினான்.

"அவர் ஏன் போகிறார்? பாக்கி ஸினிமா பார்க்கவில்லையா?" என்று குமாரி பங்கஜா கேட்டது செங்கோடன் காதில் விழுந்தது. வெட்கத்தினாலும் கோபத்தினாலும் உள்ளம் கொதித்துக் கொண்டிருந்த செங்கோடன் குமாரி பங்கஜாவைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. இன்னும் சற்று வேகமாக நடந்தான்.

"கவுண்டர் கோபித்துக் கொண்டு போகிறார் போலிருக்கிறது!" என்றான் போலீஸ் சேவகன்.



கான்ஸ்டேபிளின் சிரிப்புடன் இன்னும் இருவரின் சிரிப்புச் சத்தமும் கலந்து கேட்டது.

செங்கோடன் மனதில் மிக்க கோபத்துடனேதான் போனான். ஆனால் அந்தக் கோபமெல்லாம் செம்பவள வல்லியின் பேரில் பாய்ந்தது.

"சும்மா இருந்தவனைக் கிளப்பி விட்டுக் 'கட்டாயம் போய் இந்த அழகான ஸினிமாவைப் பார்த்துவிட்டு வா' என்று சொன்னாள் அல்லவா? அவள் பேச்சைக் கேட்டுக் கொண்டு நானும் புறப்பட்டு வந்தேன் அல்லவா? இரண்டேகாலணாவைத் தண்டமாகத் தொலைத்தேன் அல்லவா! பெண் பிள்ளையின் பேச்சைக் கேட்டுக் கொண்டு வந்த எனக்கு இதுவும் வேண்டும்! இன்னமும் வேண்டும்!'' என்று செங்கோடன் தன் மனதிற்குள் சொல்லிக் கொண்டான்.

7

மறு நாள் காலையில் செங்கோடக் கவுண்டன் வழக்கத்தைக் காட்டிலும் அதிக ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் கேணியிலிருந்து நெல் வயலுக்குத் தண்ணீர் இறைத்துக்கொண்டிருந்தான். கவலை ஏற்றத்தில் பூட்டியிருந்த மாடுகளைச் சக்கையாக வேலை வாங்கினான். 'ட்ரேய்!' 'ட்ரேய்!' என்று அவன் மாடுகளை அதட்டிய சத்தம் அரை மைல் தூரம் கேட்டது.

செங்கோடனுடைய உள்ளமோ அடுப்பில் வைத்த சோற்று உலையைப் போல் அடிக்கடி கொதித்துக் கொண்டும் பொங்கிக் கொண்டும் இருந்தது. குமாரி பங்கஜாவைப் பற்றி அடிக்கடி நினைவு வரத்தான் செய்தது. அத்துடன் அவளைப் பார்த்த இடமாகிய அரசமரமும் அதற்குப் பின்னாலிருந்த பொய்மான் கரடும் கண் முன்னால் வந்தன. பொய்மானைத் தேடிப் போவது பற்றிப் பெரியவர்கள் எத்தனையோ கதை சொல்லுவார்களே? அது தன் விஷயத்தில் சரியாகப் போய் விட்டதல்லவா?

இத்தனை நாளாகத் தன்னை விரும்பிக் கட்டிக் கொள்ளக் காத்துக் கொண்டிருக்கும் செம்பவள வல்லியை விட்டு விட்டு அந்தத் தளுக்குக்காரியிடம் தன் மூட மனம் போயிற்று அல்லவா? அதற்குச் சரியான தண்டனை கிடைத்துவிட்டது! பலர் முன்னால் அவமானப்பட நேர்ந்துவிட்டது! போதும்! போதும்! இந்த ஜன்மத்துக்குப் போதும்!

செங்கோடனுடைய உள்ளக் கொதிப்பை அதிகப்படுத்தும்படியான காரியங்கள் அன்று காலையிலிருந்து ஒன்றன்பின் ஒன்றாக நேர்ந்துகொண்டிருந்தன.

வயல்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதற்காக ஒரு ஹரிஜனச் சிறுவனைச் செங்கோடன் அவ்வப்போது கூலிக்கு அமர்த்திக் கொள்வது வழக்கம். அந்தச் சிறுவன்தான் முதன் முதலில் அவனுடைய வயிற்றெரிச்சலைக் கிளப்ப ஆரம்பித்தான்.

"என்ன எசமான்! நேற்று ஸினிமாக் கொட்டகையிலே ஏதோ கலாட்டாவாமே?......'' என்று அந்தப் பையன் மேலே பேசுவதற்குள், செங்கோடன் அவனுடைய தலையில் பலமாக ஒரு குட்டுக் குட்டி, "போடா! படவா ராஸ்கோல்! ஸினிமாவாம்! கலாட்டாவாம்! ஓடிப் போய் மடையை சரியாக வெட்டி விடு! இங்கே வம்பு பேசிக் கொண்டு நின்றாயோ, மண்வெட்டியால் உன்னை ஒரே வெட்டாய் வெட்டி விடுவேன்!'' என்றான்.

"என்னங்க, இன்றைக்கு இவ்வளவு கோபம்? போலீஸ்காரன் கிட்டப் பூசை வாங்கிக்கிட்டது நெசந்தான் போலிருக்கு!'' என்று சொல்லிக் கொண்டே சின்னான் தன்னை அடிக்க வந்த செங்கோடனிடம் அகப்படாமல் ஓடித் தப்பினான்.

பிறகு கிராமத்திலிருந்து ஒவ்வொருவராக வரத் தொடங்கினார்கள். வேறு வழியாகப் போக வேண்டியவர்கள் கூட செங்கோடனைப் பார்த்து விசாரித்து விட்டுப் போகலாம் என்று அந்தப் பக்கமாக வந்தார்கள். ஆனால் செங்கோடன் அவர்களுடைய விசாரணை விஷயத்தில் அவ்வளவாக உற்சாகம் காட்டவில்லை.

"என்னப்பா, செங்கோடா!''

"ஓகோ! நீங்கதானா? எப்போது வந்தீங்க? கவனிக்கவே யில்லையே?''

"எங்களை யெல்லாம் நீ கவனிப்பாயா? பெரிய மனுஷனாய்ப் போய் விட்டாய்?''

"அதுதான் தெரிஞ்சிருக்கே! பின்னே எதற்காக வந்தீங்க?''

"நேற்று ராத்திரி ஸினிமாக் கொட்டகையிலே ஏதோ கலாட்டா என்று

சொன்னார்கள்! அதைப் பற்றிக் கேட்கலாம் என்று வந்தேன்."

"அதைப் பற்றி என்ன கேட்கலாம் என்று வந்தீங்க?"

"அது நெசமா, என்னதான் நடந்தது என்று கேட்பதற்காகத்தான்!"

"நெசமில்லாதது உங்கள் காதில் வந்து விழுமா?—ட்ரேய்! ட்ரேய்! சுத்தப் படுக்காங்குளி மாடு! நீயும் வெறும் வம்பு கேட்டுக் கொண்டா நிற்கிறாய்? வேலை வெட்டி இல்லாத பெரிய மனிதர்கள்தான் வம்பு பேசுவதற்காக வருகிறாங்க! உனக்கு என்ன கேடு! ட்ரேய்! ட்ரேய்!"

இப்படியாக மாட்டைத் திட்டுகிறது போல் வம்பு பேச வந்தவர்களையெல்லாம் திட்டிச் செங்கோடன் அனுப்பிக் கொண்டு வந்தான்.

கடைசியாக, ஒரே ஒரு ஆசாமியிடம் அவனுடைய ஜம்பம் பலிக்கவில்லை. அன்றைக்குச் செம்பா வராமலிருந்தால் நல்லது என்று செங்கோடன் எண்ணிக் கொண்டிருந்தான். தன்னுடைய மனது சரியாயில்லாத நிலைமையில் தாறுமாறாக ஏதாவது தான் பேசிவிட்டால் என்ன செய்கிறது என்று அவனுக்குக் கவலையாயிருந்தது. ஆனால் நாம் விரும்பியபடி இந்த உலகத்தில் என்னதான் நடக்கிறது? செம்பா வழக்கமாகத் தன் அப்பனுக்குச் சோறு கொண்டு போகும் வழியில் செங்கோடன் கேணிக்கு வந்து சேர்ந்தாள்.

செங்கோடன் அவளை ஒரு தடவை நிமிர்ந்து பார்த்து விட்டு, மறுபடி 'ட்ரேய்' 'ட்ரேய்' என்று மாட்டை ஓட்டத் தொடங்கினான்!

கேணித் தண்ணீர் வாய்க்காலில் விழும் சலசலப்புச் சத்தம் தொடர்ந்து கேட்டது.

செம்பா கொஞ்ச நேரம் நின்று பார்த்தாள். செங்கோடன் அவளைப் பார்த்துப் பேசாமலிருக்கவே அவளுக்கும் கோபம் வந்து விட்டது.

"ஓகோ! இதற்குள் அவ்வளவு ராங்கி வந்து விட்டதா? என்னைப் பார்த்துப் பேசக்கூடப் பிடிக்காமல் போய் விட்டதா? ஒரு நாளிலேயே இப்படியா? சரி; நான் போய்விட்டு வாரேன்!" என்றாள் செம்பா.

"போவானேன்? அப்புறம் திரும்பிவருவானேன்?" என்றான் செங்கோடன்.

"நான் திரும்பி வந்தால் உனக்கு இனிமேல் பிடிக்காதுதான்! ஒரே போக்காக நான் தொலைந்து போய் விட்டால் உனக்குச் சந்தோஷமாயிருக்கும்! இல்லையா?"

"எதற்காக இவ்வளவு கோபதாபம் என்று தெரியவில்லை. இப்போது என்ன வந்து விட்டது? நேற்றைக்கு இந்த நேரத்திலேதான் எல்லாம் பேசி முடிவு செய்து கொண்டோமே!"

"நேற்றுச் சங்கதி நேற்றோடு போய் விட்டது. இன்றைக்கு என்ன? எல்லாம் எனக்குத் தெரியும். என்னிடம் மறைக்கலாம் என்று பார்க்காதே!"

"என்னத்தை நான் செய்து விட்டேன்? என்னத்தை உன்னிடம் மறைக்கப் போகிறேன்?"

"ஏ ஆத்தாடி! இந்த ஆண்பிள்ளைகளின் புளுகு சுருட்டை என்னவென்று சொல்ல? நேற்று சாயங்காலம் அரச மரத்தடியில் நீ அந்தப் பெண் பிள்ளையைப் பார்த்து இளிச்சிக்கிட்டு நின்றது, அப்புறம் ஸினிமாவிலே அவளைத் தூக்கிக்கிட்டு ஓடியது,— எல்லாம் எனக்குத் தெரியாது என்று எண்ணிக் கொண்டாய்?"

செங்கோடனுடைய மனதில் சுருக்கென்றது; முகத்தில் அசடு வழிந்தது. ஆயினும் ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "நேற்றுச் சங்கதி நேற்றோடு போயிற்று என்று நீதானே சற்று முன்பு சொன்னாய்?" என்றான்.

"நம்முடைய பேச்சைப் பற்றியல்லவா சொன்னேன்? அந்தப் பெண் பிள்ளை அப்படி நேற்றுச் சங்கதி என்று விட்டு விடுவாளா! அந்த......" என்று செம்பவளவல்லி இங்கு எழுதத்தகாத வசை ஒன்றைச் சொன்னாள்.

"இந்தா! இதோ பார்! என்னை நீ என்ன வேணுமானாலும் ஏசிக்கொள்! என் முட்டாள் தனத்துக்கு வேண்டியதுதான் என்று ஒத்துக் கொள்கிறேன். ஆனால் அன்னியப் பெண் பிள்ளையைப் பற்றிக் கன்னாபின்னாவென்று பேசாதே! நாக்கு அழுகிப் போகும்!" என்றான் செங்கோடன்.

"என் நாக்கு எதற்காக அழுக வேண்டும்? பொய்யும் புளுகு சுருட்டும் சொல்லுகிறவர்கள் நாக்கு அழுகட்டும்! அவள் அன்னியப் பெண் பிள்ளையாயிருந்தால், இங்கே எதற்காகப் பட்டப்பகலில் உன்னைத் தேடிக் கொண்டு வருகிறாள்? பட்டிக் காட்டுக் குடியானவன் வயலுக்குத் தண்ணீர் இறைக்கும் இடத்தில் பட்டணத்

துச் சீமாட்டிக்கு என்ன வேலை?'' என்ருன் செம்பா.

"செம்பா! என்ன உளறுகிருய்? பட்டணத்துச் சீமாட்டியாவது, இங்கே என்னைத் தேடிக்கொண்டு வரவாவது? எப்போது வந்தாள்! ஒரே புளுகாய்ப் புளுகுகிருயே?''

"நான் புளுகினல் என் நாக்கு அழுகிப் போகட்டும். என் தலையில் இடி விழட்டும். மாரியாத்தா என்னைக் கொண்டு போகட்டும். நீ சொல்லுவது பொய்யாகயிருந்தால்......!''

"ஐயையோ! எதற்காக இப்படியெல்லாம் கோரமான சபதங்களைச் செய்கிருய்?''

"இங்கே இந்த மேட்டிலே ஏறி வந்து நீயே பார்த்துக் கொள்; வருகிருளா, இல்லையா என்று. நான் இச் சமயம் வந்தது உனக்கு ஏன் பிடிக்கவில்லை யென்று இப்போதல்லவா தெரிகிறது? பூசை வேளையில் கரடி புகுந்ததுபோல் நான் வந்துவிட்டேன். ஆனல் நான் வெட்கத்தையும் மானத்தையும் விட்டவன் அல்ல. யாராவது காலிலே விழுந்து கேட்டுக் கொண்டாலும் இங்கே ஒரு நிமிஷங்கூட நான் தாமதிக்க மாட்டேன். நீயும் உன் மோகனங்கியும் கழுத்திலே கல்லைக் கட்டிக் கொண்டு கிணற்றிலே விழுந்தாலும் சரிதான்!''

செம்பாவின் வார்த்தைகள் செங்கோடன் மனதில் ஒரு ஆசையையும் ஒரு நம்பிக்கையையும் உண்டு பண்ணின. கொஞ்சம் பயமும் ஆவலும் கூடத் தோன்றின. கவலை மாடுகளை அப்படியே விட்டுவிட்டு, கிணற்றங் கரை வாய்க்கால் மேட்டில் ஏறிப் பார்த்தான். செம்பா சொன்னது உண்மைதான். சற்றுத் தூரத்தில் குமாரி பங்கஜா வந்து கொண்டிருந்தாள். ஆனல் தனியாக வரவில்லை. அவளுக்கு இருபுறத்திலும் இரு ஆண் பிள்ளைகள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் ஸினிமாக் கொட்டகையில் செங்கோடன் அரை குறையாகப் பார்த்த மனிதர்கள் என்றே தோன்றியது.

செங்கோடன் முகத்தில் அவனை அறியாமல் ஒரு மலர்ச்சி—ஒரு புன்னகை—தோன்றியது. அதோடு கொஞ்சம் அசடும் வழிந்தது. செம்பா அதைப் பார்த்துப் பொங்கினன்.

"அடே அப்பா! சந்தோஷத்தைப் பார்! வாயிலுள்ள அத்தனை பல்லும் தெரிகிறதே!'' என்ருன்.

"அவர்கள் வேறு எங்கேயாவது போகிருர்களோ, என்னமோ? என்னைப் பார்க்கத்தான் வருகிருர்கள் என்று எதனல் சொல்லுகிருய்!'' என்ருன் செங்கோடன்.

"எல்லாம் எனக்குத் தெரியும், கவுண்டா! பாம்பின் கால் பாம்புக்குத் தெரியும். பின்னே எதற்காக அந்த அல்லிராணி இந்தக் காட்டிலும் மேட்டிலும் நடந்து வருகிருள்? ஒன்று சொல்கிறேன், அதை மட்டும் மனதில் நன்ருய்ப் பதித்து வைத்துக் கொள். நன்ருய்த் தீட்டிக் கூராக்கி ஒரு கத்தி வைத்திருக்கிறேன். சமயம் பார்த்திருந்து அந்தக் கத்தியினல் குத்திக் கொன்றுவிடப் போகிறேன். அப்படிச் செய்யா விட்டால், என் பெயர் செம்பா அல்ல; என் பெயரை மாற்றி அழை!''

"செம்பா! எதற்காக இந்த மாதிரி கொடுமையான வார்த்தை சொல்லுகிருய்? அந்தப் பெண் உன்னை என்ன செய்தாள்? நான்தான் அப்படி என்ன செய்து விட்டேன்?''

"அவள் என்ன செய்தாளோ? நீ என்ன செய்தாயோ? இரண்டு பேரும் கோவலன்—மாதவி நாடகம் நிஜமாகவே நடத்தப் பார்க்கிறீர்கள். ஆனல் கண்ணகியைப்போல் நான் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டேன். என்னுடைய பாட்டன் ஒன்பது பேரைக் கொலை செய்துவிட்டு 'எல்லாக் கொலைக்கும் ஒரே தூக்கு மேடைதானே?' என்று சொன்னவன்! தெரியும் அல்லவா? அவனுடைய இரத்தம் என் உடம்பிலும் ஓடுகிறது என்பதை மனதில் வைத்துக்கொள்!''

இப்படிச் சொல்லிவிட்டுச் செம்பா விடு விடு என்று வேறு பக்கமாக நடந்து போனன்.

குமாரி பங்கஜாவும் மற்ற இருவரும் கேணியை நெருங்கி வந்து கொண்டிருந்தார்கள். செங்கோடன் கேணிக் கரையில் மடித்து வைத்திருந்த பட்டுச் சட்டையை அவசர அவசரமாக எடுத்துப் போட்டுக் கொண்டான்! (தொடரும்)

# வட்ட மேஜை

## ✶ தமிழ் மக்களுக்கு அவமானம்!

இந்திய சினிமாப் படத் தொழிலில் நம் சென்னை ராஜதானி இன்று முக்கிய ஸ்தானத்தை அடைந்திருக்கிறது. ஜெமினி, ஏ. வி. எம்., வாஹினி போன்ற சில பிரசித்தியுள்ள ஸ்டுடியோக்கள் வடநாட்டார் பிரமிக்கத்தக்க அநேக படங்களை இதுவரை தயாரித்துள்ளன. "தென்னிந்திய 'டெக்னிக்' தங்களுடையவைதவிட மிக உயர்ந்தது" என்று வடநாட்டுப் பட முதலாளிகளே ஒத்துக்கொண் டிருக்கிறார்கள்.

இருந்தாலும் நம் தமிழ்ப் படங்களில் ஒரு முக்கியமான குறை இருந்து வருகிறது. இப்பொழுதெல்லாம் நம் படங்களில் வரும் பாட்டுக்களில் ஒன்றாவது காது கொடுத்துக் கேட்பதற்கு லாயக்கில்லாமலே இருக்கிறது. இதற்கு என்ன காரணம்? ஹிந்தி சினிமா மெட்டுக்களைத் தமிழ்ப் பாட்டுக்களுக்குப் போட்டுக் குட்டிச்சுவராடிப்பதுதான். கடந்த மூன்று வருஷங்களில் வெளிவந்த படங்களில் முக்கால் வாசிக்கு மேலாகக் காப்பியடித்த ஹிந்தி மெட்டுக்களையும் பின்னணி சங்கீதத்தையும் கேட்டுக் கேட்டு காது புளித்துப் போய்விட்டது.

கர்நாடக சங்கீதம் வட நாட்டவர்களாலும் உலகோராலும் போற்றப்படுகிறது. இப்படியிருக்கத் தமிழ்ப் பட முதலாளிகள் காப்பியடித்த ஹிந்தி மெட்டுகளுக்கு அதிக முக்கியத்துவம் அளித்து நம் தென்னிந்திய சங்கீதத்தைப் பழிப்பது போன்ற ஈனமான காரியத்தை ஏன் செய்ய வேண்டும்? "பொது மக்களின் விருப்பத்துக் கிணங்கி" இம்மாதிரி செய்கிறார்களாம்! அப்படியானால் தமிழ் மக்கள் சுத்தமான, தெய்வீகமான கர்நாடக சங்கீதத்தை வெறுக்கிறார்களென்று தானே அர்த்தம் செய்து கொள்ள வேண்டும்? இது உண்மையானால் தமிழ் மக்களுக்கு இதைவிட அவமானம் வேறொன்று மிருக்க முடியாது.

பொதுவாக வட நாட்டினர் தென்னிந்தியர்களையும், அவர்கள் பழக்க வழக்கங்கள், நாகரிகம் இவைகளையும் தாழ்வாகவே மதிக்கிறார்கள் என்பது சூட்சமம் உள்ள அனைவருக்கும் நன்கு தெரியும். நம்மவர்கள் எல்லாத் துறைகளிலும் வெகுவாக முன்னேறி வருவதை வட நாட்டவர் மனப் பூர்வமாக வெறுக்கின்றனர். இது வடநாட்டில் வசிக்கும் தென்னிந்தியர்களுக்கு நன்கு தெரியும். நம் இருவரிடையேயுள்ள யோக்யதாம்சங்களை ஆராய்ந்து பார்ப்பது முற்றிலும் அனாவசியம். வடநாடு உயர்ந்த தாகவே இருந்து விட்டுப் போகட்டும். நமக்கு அக்கறையில்லை; ஆட்சேபணையுமில்லை. ஆனால் உலகம் போற்றும் நம் கர்நாடக சங்கீதத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டு வடநாட்டு சங்கீதத்தைக் கண் மூடித் தனமாய் காப்பியடிக்கும் பழக்கத்தை நம் பட முதலாளிகள் விடாமல் கைப்பற்றி வந்தால் அது தென்னிந்தியர்களுக்கு இன்னும் இழிவைத் தருவதோடல்லாமல் வட நாட்டவர்களுக்கு நம்மைப் பற்றி மேலும் மேலும் கேவலமாக நினைப்பதற்கும் கேலியாகப் பேசுவதற்கும் இடம் தரும் என்பதில் சந்தேகமில்லை.

பம்பாய்
28—6—50 ஏ. பி. சாரதி

○●○

## ஏரி பாலைவனமாக மாறுகிறது!

உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள், என்று சொல்லும்பொழுது அதற்கு வேண்டிய நீர்ப்பாசனத்தைக் கவனிப்பதில்லை.

சேலம் ஜில்லா ஊரூர் தாலுக்காவைச் சேர்ந்த சிங்காரப் பேட்டையில் நீர்த்தகிரி வலசை என்னும் பெரிய ஏரி இருக்கிறது. ஊரூர் தாலுக்காவிலேயே மிகப் பெரிய ஏரிகளில் இதுவும் ஒன்று. ஏரியில் தண்ணீர் நிற்கும் விஸ்தீரணம் 125 ஏக்கரா. நஞ்சை, புஞ்சை, நீர்கூலி உட்பட சுமார் 300 ஏக்கராவுக்கு மேல் சாகுபடி செய்யக்கூடிய நிலங்கள் உள்ளன.

மேற்படி ஏரியை நம்பி சுமார் ஏழு கிராமத்து ஏழை ஜனங்கள் பிழைத்து வருகின்றனர். அப்படிப்பட்ட ஏரியில் தண்ணீர் வசதி இல்லாததால் நாலு வருஷ காலமாக மஹசூல் சாவியாய்ப் போகிறது. ஏரியின் ஜலம் நிற்கும் விஸ்தீரணத்தில் ஆற்று மணல் நிரம்பி ஏரி மேடாய் விட்டது. ஏரிக்குப் போதுமான தண்ணீர் வர ஆறு ஒன்று இருக்கிறது. ஏரி மேடாய் விட்டதன் காரணத்தால், தண்ணீர் எல்லாம் ஏரியின் ஒரு கோடியில் போய்த் தங்கி விடுகிறது.

மணல் போக்கியைக் கட்டி ஏரியிலிருக்கும் மணலை அப்புறப் படுத்திக் கொடுக்க, சர்க்காருக்குச் சென்ற ஐந்து வருஷ காலமாக விண்ணப்பம் மூலமும், ஜில்லா கலெக்டர்கள் ஊருக்கு விஜயம் செய்த பொழுதெல்லாம் கிராம மக்கள் கேட்டுக்கொண்டும் இதுவரை ஒரு நடவடிக்கையும் காணவில்லை. ஏரி நிரம்பினால் இரண்டு மாதத்துக்குப் போதுமான ஜலம்தான் நிற்கிறது. ஏரியின் கரையை உயர்த்தி, மணல் போக்கியைக் கட்டி, ஏரியிலிருக்கும் மணலை அப்புறப்படுத்த

சர்க்கார் உடனடியாகக் கவனித்து சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உத்தரவிட வேண்டும். இல்லாவிட்டால், மேற்படி நிலங்களில் புஞ்சை சாகுபடிதான் செய்ய முடியும்.

நிற்க, இவ்வூருக்குச் சற்றுத் தூரத்தில், "பியாறு, என்ற ஒரு சிறிய ஆறு இருக்கிறது. மேற்படி ஆற்றின் 32, 33 நெம்பர் இடத்தில் மிகவும் குறைந்த செலவில் அதாவது சுமார் 1,000 ரூபாய் செலவில், சர்க்காரால் நீர்தேக்கம் (அணை) கட்டிக் கொடுத்தால் சுமார் 50 ஏக்கராவுக்கு மேல், புஞ்சை நிலங்களில் நஞ்சை சாகுபடி செய்யலாம். மேற்படி இரண்டையும் உடனடியாகச் செய்தால் இப்பொழுது பற்றுக்குறைப் பிரதேசமாய் இருப்பதை உபரி பிரதேசமாக்கமுடியும்.

சிங்காரம் பேட்டை
30—6—50 முஹம்மத் ஷபிபுல்லா

○●○

## ★ சைக்கிள் ஓட்டிகளுக்கு ஆபத்து!

நான் ஒரு சைக்கிள் ஓட்டி. டிராமிலும் பஸ்ஸிலும் உள்ள தொல்லையையும் அசௌகரியத்தையும் உத்தேசித்தே சைக்கிளை உபயோகித்து வருகிறேன். ஆனால் இப்பொழுது சைக்கிள் ஓட்டிகளுக்கு நேர்ந்திருக்கும் அபாயத்தைக் கவனித்தால் இந்தத் துறையிலும் விமோசனம் இல்லை என்றே நினைக்கத் தோன்றுகிறது.

சைக்கிள் ஓட்டிகளைப் போலீஸார் எதற்குப் பிடிக்கலாம், எதற்குப் பிடிக்கக் கூடாது என்பதில் ஒரு வரையறை இருப்பதாகவே தெரியவில்லை. இரண்டு பேர் அடுத்தடுத்துப் போகக் கூடாதாம். இரு சைக்கிள் ஓட்டிகள் பேசிக்கொண்டு சற்று முன் பின்னாகச் சென்றாலும் வந்தது ஆபத்து. "இப்பொழுது இல்லாவிட்டாலும் கொஞ்ச தூரத்துக்கு முன்னால் ஒன்றாக வந்திருப்பீர்கள்!" என்று மி. .டுகிறார்கள்.

சைக்கிளை வெளியே விட்டுவிட்டு ஒரு வீட்டுக்குள் நுழைந்து விலாசம் கேட்கப் போனால் அது ஒரு குற்றம். சைக்கிள் 'பிரேக்' சற்றுத் தளர்ந்திருந்தால் அது ஒரு குற்றம். சைக்கிள் லைட் ஒளி சற்று மங்கியிருந்தால் அது ஒரு மன்னிக்க முடியாத பெரிய குற்றம்!

இவ்வாறு இவர்கள் நம் சைக்கிள்மீது காட்டும் 'பரிவு' நாளுக்கு நாள் அதிகமாகி விட்டால் என்ன செய்வது என்று மிகவும் கவலையாயிருக்கிறது.

இந்தப் 'பரி'வின் முதல் கட்டம் சைக்கிள் ஓட்டியைப் போலீஸார் நிறுத்துவது. 'ஏய்!', 'ஓய்!', அல்லது ஏகத்தாளமான ஒரு 'மிஸ்டர்' போன்ற வார்த்தையால் அவர்கள் சைக்கிள்காரர்களைக் கூப்பிடுவார்கள். பிறகு அவர்கள் கேட்கும் கேள்விகள் எல்லாம் ஒரே அதட்டல் மய



மாக இருக்கும். இதைத் தொடர்ந்து போலீஸ் ஸ்டேஷனில் விசாரணை நாடகம் நன்று நடக்கும்.

'இரண்டு பேர் சேர்ந்து போனீர்களா? — ஒரு ரூபாய்!' 'பிரேக் சரியாக இல்லையா? — இரண்டு ரூபாய்!'; 'மணி அடிக்க வில்லையா? — மூன்று ரூபாய்!' என்று ஒரு குமாஸ்தா எக்ஸ்பிரஸ் வேகத்தில் நீதி வழங்கித் தள்ளுவார். எப்படி இருக்கிறது நிர்வாகம்?

உண்மையில் அப்பழுக்கற்ற சைக்கிள்களே தெருவில் போக வேண்டும் என்பது சர்க்கார் எண்ணமானால், இவர்கள் சீர்கெட்ட வண்டிகளைப் பழுது பார்த்து, அபராதத்தோடு அதன் கூலியையும் பெற்றுக் கொள்ளக்கூடாதா?

உதாரணமாக, இரவு பத்து மணிக்கு ஒரு போலீஸ்காரர் 'பிரேக்' சரியாக இல்லை என்று ஒரு சைக்கிள்காரரைப் பிடிக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அந்த மனிதர் மறுநாள் காலை எழும்பூர் கோர்ட்டுக்குப் போய் அபராதம் செலுத்திவிட்டு நேரம் கழித்து ஆபீஸ் போகிறார். இடையில் வண்டியைச் செப்பனிட அவருக்குப் பொழுதேது? இந்த நிலையில் மாலையில் காரியாலயத்தி லிருந்து திரும்பும்போது அதே காரணத்துக்காக மற்றொரு போலீஸ்காரர் அவர் மேல் 'கேஸ்' எழுதி, மறு நாளும் அபராதம் செலுத்த அவரை அழைத்தால் அவருக்கு எப்படியிருக்கும்? — இம்மாதிரி அனுபவம் எனக்கே ஏற்பட்டது.

அந்தத் தொல்லைகளின் காரணமாக, இப்பொழுதெல்லாம் சைக்கிளில் போகும்போது குறுக்கே ஓடும் குழந்தைக்கும் எதிரில் வேகமாக வரும் லாரிக்கும் நான் பயப்படுவதில்லை. அதற்குப் பதிலாக, போலீஸாரைத் தூரத்தில் காணும்போதே, 'நல்லபடியாக இவர்களைத் தாண்டிச் செல்ல வேண்டுமே, பகவானே!' என்றுதான் பிரார்த்தித்துக் கொள்கிறேன்!

மயிலாப்பூர்
2—7—50 எம். எஸ். ஸ்ரீநிவாஸன்.

○●○

## பயமாயிருக்கிறது!

நான் ஒரு எஸ். எஸ். எல். ஸி. மாணவன். மயிலாப்பூர் ஸான்தோம் ஸ்கூலில் வாசிக்கிறேன். எனக்கு ஒரு தம்பியும், மூன்று தங்கைகளும் இருக்கிறார்கள். நான்தான் மூத்தவன். ஒரு சாமியார் சென்ற எட்டு வருட காலமாக அம்பாள் பூஜை செய்கிறேன் என்றும், கடவுள்கள், தேவர்கள், தேவதைகள், முனிவர்கள் எல்லோரும் எங்கள் வீட்டுக்கு வந்திருக்கிறார்கள் என்றும் ஏமாற்றி வந்தார். என் தந்தை இறந்து ஐந்து வருடங்களாகின்றன. அவர் இருக்கும் பொழுது சாமியாரை ஒழிக்கப் பாடு பட்டார். என் அம்மாவின் அம்மா (பாட்டி) சாமியாரின் தந்திரம், ஏமாற்று வித்தைகளைக் கண்டுகொள்ளவில்லை. பாட்டிக்கு என் அம்மா பயப்படுகிறாள். என் தந்தை கோதாவரி நதியில் தற்செயலாய் மூழ்கி இறந்து போனார். அதே கவலையில் இரண்டு வருடங்களுக்குப் பின்னால் என் தாத்தாவும் இறந்துபோனார். அவரால் கூடச் சாமியாரை விரட்ட முடியவில்லை. பாட்டி பிடிவாதமாக இருந்தாள். இப்பொழுதுகூடச் சாமியார் பைத்தியம் நீங்கவில்லை. 'நல்ல காலம் பத்து நாளில் வரும், சித்திரையில் வரும்' என்றெல்லாம் பிதற்றுகிறாள். எப்படி வரும்? நான் படித்துத் தேறி முன்னுக்கு வந்தால்தானே பணம் சம்பாதித்து அவர்களைக் காப்பாற்ற முடியும்? என் குடும்பத்தைச் சீரழித்த அந்தத் திருட்டுச் சாமியாரை ஒழித்துக் கட்ட முடிவு செய்தேன். நானோ பதினாறு வயதுச் சிறுவன்; எனக்குச் சற்று பயமாயிருக்கிறது. அரசாங்கம் இந்தமாதிரி திருட்டுச் சாமியார்களைத் துரத்த முன் வருமா? மேலும் பெண்களுக்குக் கட்டாயக் கல்வி ஏற்படுத்தவும் முற்படுமா?

சென்னை
19—6—50 கே. மல்லிநாதன்

○●○

## கொல்லி மலை வாழ்க!

எங்கள் கிராமத்திலிருந்து இரண்டு மைல் தூரத்தில் கொல்லிமலை இருக்கிறது. அதிலிருக்கும் மரங்களைப் பொதுமக்கள் வெட்டி எடுத்துச் செல்லாமலிருக்க அரசாங்கத்தார் சில அதிகாரிகளை ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

ஆனால் அதிகாரிகள், "பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன்" என்ற முதுமொழிப் படி இருந்து வருகிறார்களோ என ஐயுறும்படி இருக்கிறது. மாதத்திற்கு மாதம் மலையிலுள்ள மரங்கள் மறைந்து கொல்லி மலை, கல் மலையாக மாறுவது என் போன்ற சிறு விவசாயிகளுக்கே தெரியும்போது, படித்துப் பட்டம் பெற்று மாதம் ஒரு முறையும் வருஷம் இரு முறையும் வந்து பார்வையிட்டுப் போகும் காட்டிலாகா மேலதிகாரிகளுக்கும், கிராமத்தில் இருக்கும் கிராம கீழ் அதிகாரிகளுக்கும் தெரியாமற்போக நியாயமில்லை.

மிதமின்றி மழை பெய்யக் கூடிய எங்கள் கிராமத்தில் சென்ற ஐந்து வருஷங்களாக பருவ காலங்களில் கூடச் சரியாக மழை பெய்யவில்லை. மலையில் உள்ள மரங்கள் அழிந்ததுதான் மழையின்மைக்குக் காரணமாயிருக்கலாமோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. நிலைமை மாறாமல் போனால் விவசாயமும் விளைச்சலும் எங்கள் கிராமத்தைப் போன்ற கொல்லி மலை அடிச்சாரலிலுள்ள கிராமங்களில் நசித்து விடும்.

கல்குறிச்சி
4—6—50 ஆர். கே. ராமசாமி

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25ஐ "தமிழ் மக்களுக்கு அவமானம்!" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ ஏ. பி. சாதிக்கும், "சைக்கிள் ஓட்டிகளுக்கு ஆபத்து!" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ எம். எஸ். ஸ்ரீநிவாஸனுக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.



● பிஜித் தீவிலுள்ள கரும்புத் தோட்டங்களில் நம்முடைய நாட்டு மக்கள் படும் துயரங்களைக் குறித்துப் பாரதியார் ஊனும் உள்ளமும் உருகும்படி பாடினார். அந்த பிஜித் தீவுக்கு, அங்குள்ள நம் நாட்டு மக்களுக்குத் தொண்டு செய்வதற்காக, உலக வாழ்க்கையைத் துறந்த மகான் ஒருவர் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு சென்றார். பன்னிரண்டு வருஷம் அரும்பெரும் பணிகள் புரிந்த பிறகு, நாளது ஜூலை மாதம் 8உ சென்னைக்குத் திரும்பி வருகிறார். இங்கே சில நாள் தங்கிவிட்டு மீண்டும் பிஜித் தீவுக்குச் செல்கிறார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சந்நியாசியாகிய சுவாமி ருத்ரானந்தர் நமது தமிழ் நாட்டைச் சேர்ந்தவர் என்பது தமிழர்களாகிய நமது பாக்கியம். 1922-ம் ஆண்டில் மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து கலாசாலைப் படிப்பை விட்ட சுவாமி ருத்ரானந்தர் பிற்பாடு தெய்வ நெறியைத் தேடி உலக வாழ்க்கையைத் துறந்து ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்தார். அவ்விதம் தேடி அடைந்த தெய்வ நெறியில் உறுதியாக நின்று ஏழைகளுக்கும் தீனர்களுக்கும் தொண்டு புரிந்து வருகிறார். இத்தகைய மகானுக்குச் சென்னை வாசிகளின் சார்பாக வரவேற்பு உபசாரம் அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஜூலை மாதம் 9உ மாலை தியாகராஜநகர் ஸ்ரீ ராமகிருஷ்ண உயர்தரப் பள்ளி மண்டபத்தில் வரவேற்புக் கூட்டம் நடைபெறுகிறது. அன்பர்கள் திரளாக விஜயம் செய்து சிறப்பிக்கக் கோருகிறோம்.

# யுத்த கேந்திரம்



ஜெயமணி

## 5. கொரியா

செவ்வாய்க்கிழமைக்கு மங்கள வாரம் என்ற பெயர் ஏற்பட்டிருப்பது போலக் கொரியாவுக்குக் காலைக் கதிரவனின் ஒளி வீசும் அமைதியான பூமி என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. சோஸன் என்பதுதான் கொரியாவின் புராதனப் பெயர். அதற்குக் காலை அமைதி நிலவும் பூமி என்று அர்த்தம். ஆனால் கொரியாவின் சரித்திரத்தில் அந்த நாட்டிலே பல நூற்றாண்டுகளாக ஒளி வீசியதாகவோ அமைதி நிலவியதாகவோ தெரியவில்லை!

ஐரோப்பியர்கள் காட்டுமிராண்டிகளாகத் திரிந்து வந்த காலத்தில் கொரியா மக்கள் மேதாவிகளாகவும் கலை நிபுணர்களாகவும் தொழில் திறமை படைத்தவர்களாகவும் இருந்து வந்தார்கள் என்று ஐரோப்பிய சரித்திராசிரியர்களும் ஒத்துக் கொள்கிறார்கள். சீனாவிலிருந்து பௌத்த மதம் கொரியாவில் பரவியதாகவும் அங்கிருந்துதான் ஜப்பானியர்கள் அந்த மதத்தைக் கடைப்பிடிக்க ஆரம்பித்தார்கள் என்றும் பண்டைய சரித்திரங்களிலிருந்து தெரிகிறது.




ஜப்பானுக்கும் கொரியாவுக்கும் இடையில் நூற்றுப் பத்து மைல்கள் தூரமே கடல் இருப்பதால், ஜப்பானியர்கள் தங்களுடைய மண்ணாசையை நிறைவேற்றிக் கொள்ள முதன் முதலாகக் கொரியாவைத்தான் தேர்ந்தெடுத்தார்கள். சில நூற்றாண்டுகளுக்கு முன்பு அந்த நாட்டில் ஜப்பானியரின் படையெடுப்பு ஆரம்பமாகி விட்டதெனினும், 1910-ம் வருஷத்தில் தான் கொரியா முழுவதும் ஜப்பானியரின் பூரண ஆதிக்கத்துக்கு வந்தது. கொரியாவிலிருந்த இயற்கைச் செல்வத்தைக் கொண்டு ஜப்பான் சீனாவிலும் படையெடுத்துப் பெரிதும் வெற்றிபெற்றது. பிறகு சென்ற மகா யுத்தத்தில் ஜப்பான் மளமளவென்று தென்கிழக்கு ஆசியா நாடுகளை வெல்லாம் கபளீகரம் செய்தது.

புதிய வெள்ளம் பழைய வெள்ளத்தையும் அடித்துக் கொண்டு போய்விட்டது என்று சொல்லுவார்கள் அல்லவா? அது போலவே ஜப்பானுக்குக் கிடைத்த புதிய வெற்றிகள் வெகு காலத்துக்கு முன் அது கொரியாவில் அடைந்த வெற்றியையும் அடித்துக்கொண்டு போய்விட்டன! அதாவது இரண்டாவது மகா யுத்தத்தில் தோல்வி யடைந்த ஜப்பானியர் கொரியா உள்படத் தாங்கள் ஜெயித்த எல்லா நாடுகளையும் இழந்தது மாத்திரமல்ல, அவர்களுடைய சொந்த நாடு அமெரிக்கர்களிடம் அடிமையாகும்படியும் நேர்ந்தது!

முப்பத்தைந்து வருஷங்கள் வரையில் ஜப்பானியரின் ஆதிக்கத்துக்கு இலக்கான கொரியர்கள் சென்ற மகா யுத்தத்தில் ஜப்பானியரின் தோல்வியைக் கண்டு மகிழ்ச்சி யடைந்தார்கள். தங்களுக்கு விடுதலை கிடைத்து விட்டதாக நினைத்தார்கள். ஆனால் அவர்களுடைய சந்தோஷம் அற்ப சந்தோஷமாக முடிந்தது. ஒரு வல்லரசின் (ஜப்பான்) ஆதிக்கத்திலிருந்த கொரியா யுத்தம் முடிந்தபின் துரதிர்ஷ்ட வசமாக இரண்டு வல்லரசுகளின் (ருஷ்யா, அமெரிக்கா) ஆதிக்கத்துக்கு உட்படும்படி நேர்ந்தது. அதாவது கொரியாவின் கதை தலைவலி போய் திருகுவலி வந்த கதைக்கு ஒப்பாக முடிந்தது!

எண்பத்தையாயிரம் சதுர மைல் விஸ்தீரணம் உள்ள கொரியாவில் மலைகளும் நதிகளும் ஏராளமாக இருக்கின்றன. ஆயிரத்து எழுநூறு மைல் நீளமுள்ள அதன் கடற்கரையோரம் கேந்திரஸ்தானங்களில் கண்ணோட்டமுள்ள வல்லரசுகளின் பேராசைக்கு எப்போதுமே இலக்காக இருந்து வருவதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

துறைமுக வசதி அதிகமாக இருக்கும் கொரியாவில் கென்ஸான், பூஸான், ஜின்ஸென், இஞ்சான் முதலிய துறைமுகங்கள் மிகச் சிறந்தவை.

கொரியாவை ஜப்பானியர் கைப்பற்றியது அக்கிரமம் என்றாலும் அவர்களுடைய ஆட்சிக் காலத்தில் அங்கு அவர்கள் அநேக அபிவிருத்திகளைச் செய்து அந்த நாடு தொழில் துறைகளில் சிறந்து விளங்கும்படி செய்தார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

ஜப்பானியரின் காலத்தில்தான் அங்கு பல சுரங்கங்கள் திறக்கப்பட்டன. கொரியாவில் தங்கம், இரும்புச் சுரங்கங்கள் முக்கிய ஸ்தானம் வகிப்பதுடன் நிலக்கரி, தாமிரம், வெள்ளி, மைக்கா, காரீயம் முதலிய சுரங்கங்களும் கொரியா தேசத்தின் செல்வக் களஞ்சியங்களாகத் திகழ்ந்து வருகின்றன.

அங்கு நாலில் மூன்று மடங்கு காடுகளாக இருப்பது அதன் வளமைக்கு முக்கிய காரணமாக இருக்கிறது. காடுகளை அழிக்கக் கூடாது என்று ஜப்பானியர்கள் வெகு காலத்துக்கு முன்பே கடுமையான தடை உத்தரவு பிறப்பித்திருந்ததால், கொரியா காட்டுச் செல்வத்தை இழந்து மழையில்லாமல் தவிக்கும்படி நேரவில்லை.

ஜப்பானியர் தங்களுடைய சொந்த நலன்களை உத்தேசித்துக் கொரியாவை அபரிமிதமாக அபிவிருத்தி செய்தார்களெனினும், கொரியா ஜனங்கள் நவீனத் துறைகளில் முன்னேற்றம் அடைவதற்கு ஜப்பானியர் உதவி புரியவில்லை. அதனால் இன்றும் கொரியாவில் பெரிய சில நகரங்களைத் தவிர மற்ற எல்லா இடங்களிலும் எண்ணிக்கையற்ற மண் குடிசைகளையும் வைக்கோல் கூரைகளையும் காணலாம்.

கொரியாவில் பால்ய விவாக முறை அனுஷ்டானத்தில் இருப்பதுடன், அந்த நாட்டின் பெண்கள் ஆடவர்களைக் காட்டிலும் தாழ்ந்தவர்கள் என்று எல்லோராலும் கருதப்படுகிறார்கள்.

கொரியாவிலுள்ள விவசாய நிலங்களில் பாதிக்கு மேல் ஜப்பானியர்களுக்குச் சொந்தமாக இருந்தது. அந்த நாட்டில் ஜப்பானியர்களின் அநீதிக்கு மற்றொரு எடுத்துக் காட்டாகும்.

பெரும்பாலான கொரியர்களும் விவசாயத்தின் மூலமே ஜீவனம் செய்கிறார்கள். கொரியாவிலே விளையும் தானியங்களில் நெல் முதல் ஸ்தானமும் பார்லி இரண்டாவது ஸ்தானமும் வகிக்கின்றன.

அந்த நாட்டில் உள்ள விவசாய நிலங்களின் விஸ்தீரணம் ஒரு கோடி ஏக்கர்களுக்குமேல் இருக்கிறதெனில், கொரியா மக்களின் வாழ்க்கையில் விவசாயம் எவ்

★

கொரியாவில் இரண்டரைக் கோடி ஜனங்களுக்கு மேல் இருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோரும் அங்கேயே பிறந்தவர்கள். கொரியர், சீனர், ஜப்பானியர் யாவரும் மங்கோலியர்களின் சந்ததிகளே யாயினும், அந்த மூன்று நாட்டினரும் உருவம் முதலிய அம்சங்களில் மூன்று விதமாக இருப்பதைச் சிருஷ்டியின் விசித்திரம் என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது!



ஸியோல் நகரிலுள்ள அரண்மனை வாசற்படி



கொரியாவை ஆட்சி புரிந்த மன்னர்கள்

வளவு முக்கியமானது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

இதைத் தவிர அங்கு ஏராளமாகப் புகையிலையும் பருத்தியும் உற்பத்தியாகின்றன. எனவே, தென் கிழக்கு ஆசியாவிலுள்ள பெரும்பாலான நாடுகளையும் போல் கொரியாவும் பொருளாதாரத் துறையில் மாத்திரமல்ல, அரசியல் துறையிலும் முக்கிய ஸ்தானம் வகித்து வருகிறது.

கொரியாவில் ஜவுளி மில்கள் ஏராளமாக இருக்கின்றன. பட்டு, நார்ப் பட்டு நெசவுத் தொழிலிலும் அந்த நாடு பிரசித்தி பெற்று விளங்குகிறது.

மருந்து, சிமெண்டு, காகிதம் முதலியன உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளும் கொரியாவில் இருக்கின்றன.

வெண்கலத்தினாலும் தங்கத்தினாலும் அற்புதமான வேலைப்பாடுகளுடன் கூடிய பாத்திர வகைகளைச் செய்வதில் கொரியர்கள் ஒரு காலத்தில் ஒப்பற்ற திறமை வாய்ந்தவர்களாக விளங்கி வந்தார்கள்.

தற்போது வடக்கு கொரியா கம்யூனிஸ்டுகளால் கைப்பற்றப்பட்ட ஸியோல் 1392-ம் ஆண்டிலிருந்து கொரியாவின் தலைநகரமாக இருந்து வந்தது. அந்த நகரின் பெயரை ஜப்பானியர்கள் கெய்ஜோ என்று மாற்றினார்கள். கொரிய பாஷையில் ஸியோல் என்பதற்கும் ஜப்பானிய பாஷையில் கெய்ஜோ என்பதற்கும் தலைநகர் என்பது பொருள். கல்வி, விஞ்ஞானத் துறைகளில் ஸியோல் கொரியாவின் இருதயமாகத் திகழ்கின்றது. அங்கு பல முக்கிய தொழிற்சாலைகளும், ஏராளமான நவீனக் கட்டிடங்களும் இருக்கின்றன. அந்த நகரின் ஜனத்தொகை பத்து லட்சம் ஆகும்.

ஸியோலுக்கு அடுத்த படியாக மூன்று லட்சம் ஜனத்தொகையுள்ளதும் வடக்கு கொரியாவின் தலைநகருமான பியாங்யாங் கொரியாவில் முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. அது ஸியோலிலிருந்து வடமேற்கே 162 மைல் தூரத்தில் இருக்கிறது. மூவாயிரம் வருஷங்களுக்கு முன் சிருஷ்டிக்கப்பட்ட பியாங்யாங் நகர் இன்று நவீன நகரங்களில் ஒன்றாகத் திகழ்கிறதெனினும், இடிந்துபோன பழைய சுவர்களும் பாழான கட்டிடங்களும் அதனுடைய பண்டைய கால நிலைக்கு அறிகுறியாகக் காட்சி யளிக்கின்றன.

அதற்கு அடுத்தபடியாக பூஸானைக் குறிப்பிடலாம். இரண்டரை லட்சத்துக்கு மேல் ஜனத்தொகையுள்ள பூஸான் கொரியா ஜலசந்தியில் முக்கியத் துறைமுகமாகவும் விளங்குகிறது. அதை எல்லா நவீன சாதனங்களுடன் கூடிய நகரமாகச் செய்தவர்கள் ஜப்பானியர்கள் தான். பூஸான் மீன் பிடிக்கும் தொழிலில் பிரசித்தி பெற்றது.

★

ஜப்பானியரின் ஆட்சிக் காலத்தில் கொரியாவிலே ஏராளமான கல்விச் சாலைகள் அமைக்கப்பட்டன. எனினும் கொரியா மக்கள் என்றென்றும் தொழிலாளர்களாகவும் ஜப்பானியர்கள் என்றென்றும் எஜமானர்களாகவும் இருக்க வேண்டும் என்ற நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு அந்த நாட்டில் கல்விச் சாலைகள் அமைக்கப்பட்டது ஜப்பானுக்குப் பெரிய களங்கமாகும். ஜப்பானியரிடம் விசுவாசம் காட்ட வேண்டும் என்ற பல்லவியும் கொரியா பள்ளிக்கூடப் பாட புத்தகங்களில் முக்கிய இடம் பெற்றிருந்தது!

கொரியாவில் கி. பி. 384-ம் வருஷத்திலிருந்து பௌத்த மதம் பரவத் தொடங்கியது என்று சரித்திரங்கள் கூறுகின்றன. இன்று அங்கு ஏராளமான பௌத்த மடாலயங்கள் இருப்பதுடன், மூன்று லட்சம் பௌத்தர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்களைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமாகக் கிறிஸ்துவர்கள் இருக்கின்றனர். மற்றவர்கள் எல்லோரும் குறிப்பிட்ட யாதொரு மதமுமின்றி முன்னோர்களைப் பூஜிக்கும் ஒருவித வழக்கத்தை அனுஷ்டித்து வருகிறார்கள்.

# அழகி டி. ஆர். ராஜகுமாரி
## ஏன் சருமத்தை அழகுபடுத்த
# லக்ஸ் டாய்லட் சோப்பை
## நம்புகிருர் என்பதை தெரிந்துகொள்ளுங்கள்



அவர் கூறுவதாவது:
"பிரதி தினமும் லக்ஸ் டாய்லட் சோப்பின் எளிய பராமரிப்புதான் என் சருமத்தை மிருதுவாகவும் அழகுடையதாகவும் இருக்கச் செய்கிறது. நீங்களே அதை செய்து பாருங்கள். லக்ஸ் டாய்லட் சோப்பின் பரிமளம் மிகவும் சிறந்ததும் மலர்ச்சி தருவதும் கூட என்பதை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள்."




☆ இனிய
மணத்துடன் கூடிய இந்த
வெண்மையானதும்
சுத்தமானதுமான சோப் உங்கள்
• சருமத்தையும் வசீகரமாக
செய்யும்!

**சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்**

LTS. 244-172 TM

# ஸ்ரீ ராமகிருஷ்ண உபநிஷதம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## 17. பஜகோவிந்தம்

"குழந்தாய்! தூங்கு, தூங்கு!" என்று தாய் சொல்லுகிருள். "நான் தூங்கிப் போனேன், அம்மா!" என்கிறது குழந்தை. தாயிடம் உள்ள அன்பினுலும் தூக்கம் என்ருல் என்ன என்பதை அறியாதபடியாலும் குழந்தை அப்படிச் சொல்கிறது. சமாதி நிலை யடையாத ஒருவன் 'சிவோஹம்' 'சிவோஹம்' என்று புஸ்தகம் படித்துவிட்டுச் சொல்லுவதும் இத்தகைய பேச்சுத்தான். குழந்தையானது உண்மையில் தூங்கினுல் 'தூங்கினேன்' என்ற பேச்சு எப்படி உண்டாகும்?

எவ்வளவு இல்லை என்ருலும் 'நான்' என்பது உள்ளத்தை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்க, அத்தகையவனுக்குப் பிரம்மம் நிர்க்குணமாக நின்று எப்படி உதவ முடியும்? பரம்பொருளை ஈசுவரனுகப் பாவித்து, பிரபஞ்சத்தை அவனுடைய லீலையாகக் கொண்டு பகவானை வழிபட்டுப் பக்தி செய்தலே முறை. அவ்விதம் செய்து வந்தால், 'நான்' என்னும் காயானது முற்றிக் கனியாகி, நன்ருகப் பழுத்து உதிர்ந்து போகும். அடையாத ஞானத்தைஅடைந்து விட்டதாகப் பாவிப்பதனுல் ஒருவிதமான பயனும் இல்லை.

அத்துவைத பண்டிதருக்குப் பரமஹம்ஸர் தம்மைப் பற்றிய அடக்கத்துடன் சொல்லுகிருர்:

"'நான்' 'நான்' என்னும்அஞ்ஞானத் தன்-நினைவு என்னைப் பாதித்துக் கொண்டிருக்கும் வரையில் என் பிரம்மம் சகுணப் பிரம்மமே யாகும். சர்வேசுவரனைத் தியானித்து பக்தி செய்வதில் என்ன குறை? தேவியை நான் வழிபடுகிறேன். அவள் பல ஜீவன்களாகவும், பிரபஞ்சமாகவும் என் முன் நிற்கிருள். பகவதியும் ஈசனும் ஒன்றே. வைரக் கல்லும் வைரக் கல்லின் பிரகாசமும் வெவ்வேரு? சூரியன் வேறு, வெய்யில் வேறல்ல. ஒன்று இன்றி மற்ருென்றைக் காண முடியாது. நான் வழிபடும் தேவி இரண்டறத் தனியே நிற்கும் பிரம்மமே யாவாள்.

"சிவோஹம் என்று வாயால் சொல்வதில் பயனில்லை. பக்தி செய்து 'நான்' என்னும் ஆணவம் முற்றிலும் அற்றுப் போன பின்னரே, சிவோஹம். அது வரையில் நான் ஆண்டவனுக்கு அடிமை. நான் அவன் ஏவியதைச் செய்யும் கருவி."

* * *

ஒரு சாது புண்ணியஸ்தலம் ஒன்றுக்கு வந்து அத்துவைத உபந்யாசங்கள் ஏராளமாகச் செய்து கொண்டிருந்தார். அச்சமயம் அங்கே இருந்த ராமகிருஷ்ண தேவர் அவரைப் பற்றி ஒரு கெட்ட சமாசாரம் கேள்விப் பட்டார். பிறகு ஒரு நாள் சாது இருந்த பக்கம் சென்றபோது, சாதுவைச் சந்தித்து, "என்ன துறவியாரே! வேதாந்தத்தை அலசிக் கொட்டுகிறீரே! ஊரிலே ஏதோசொல்லிக் கொள்ளுகிருர்களே, அதைப்பற்றிய உண்மை என்ன?" என்று பரமஹம்ஸர் கேட்டார்.

"அதனுல் என்ன? நிழல் நிழலுடன் விளையாடியதைப் பற்றி வேதாந்த ஞானம் பெற்றவர்களுக்கு என்ன விசாரம்? உலகமெல்லாம் மாயை. இந்தப் பிரபஞ்சமே பொய்



யாக இருக்க, என்னுடைய உடலின் காம சேஷ்டைகள் மட்டும் உண்மையா? எல்லாம் பேய்த்தேர். இதற்கு வேதாந்த ஞானியான தாங்கள் ஏன் வருத்தப்பட வேண்டும்?'' இவ்வாறு அத்துவைத நிபுணராகிய அந்தச் சந்நியாசி சொன்னதைக் கேட்ட ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு அடக்க முடியாத வெறுப்பு உண்டாயிற்று.

"உம்முடைய வேதாந்தத்தைத் தீயில் போட்டுக் கொளுத்தும். உம்முடைய படிப்பு ஒரு பெரும் மோசம். ஜனங்களை ஏமாற்றிச் சிற்றின்பத்துக்கு ஒரு வழி தேடினீர்'' என்றார்.

பக்தியில்லாத வேதாந்த மாயா வாதம் மிகவும் அபாயகரமானது.

துரியோதனன்கூட ஒரு சமயம் "ஆண்டவன் என் உள்ளத்தில் வசிக்கிறான். அவனல்லவோ, என்னை இவ்வாறு செய்யச் சொல்லுகிறான்? என் பொறுப்பு ஒன்றுமே இல்லை. என்னை ஏன் குற்றம் சொல்லுகிறீர்கள்?'' என்றானாம்!

ஒருவன் ஆண்டவனுக்கு அடிமையாகிப் போய்த் தன் செயல் எல்லாம் ஆண்டவன் திருவுள்ளம் என்று உண்மையில் நினைத்தால் அவன் எவ்வாறு பாபச் செயலில் புக முடியும்? பாப எண்ணமே அவனை அணுகாது. பரதநாட்டியம் நன்றாகக் கற்ற பெண் ஒரு அடி பிசகாக வைப்பாளா? அவளுடைய கால்கள் ஒரு யோசனையுமின்றித் தாளத்தோடு துள்ளும். நான் ஆண்டவனுடைய அடிமை, எல்லாம் அவனுடைய செயல்—என்கிற புனித எண்ணம் உள்ளத்தில் நிலைத்து விட்டால் அந்த இதயத்தில் அழுக்கு வந்து சேர இடமே இல்லை! இதை மறந்துவிட்டுச் சில கற்றறி மூடர்கள் சாஸ்திர சூத்திரங்களை மோசத்துக்கும் பாபத்துக்கும் கருவியாக உபயோகிக்கப் பார்க்கிறார்கள். 'உலகமெல்லாம் மாயை; ஆகையால் நாம் சிற்றின்பம் நுகர்வதில் என்ன பாவம்?' என்று தம்மைத் தாமே மோசம் செய்து கொள்ளுகிறார்கள். ஞானனுபவமாகாத அத்துவைத வீண் பேச்சை விட்டுப் பக்தி முறையில் ஈடுபடுவதே மேலானது.

உபநிஷத பிரம்ம சூத்திர வேதாந்த சாகரத்தின் கரையைக் கண்டவரான ஸ்ரீ சங்கர பகவத்பாதாசாரியரே உலகம் வியக்கும் தம் ஞான மயமான மதியை நோக்கி "மூட மதியே! கோவிந்தனைத் துதி! கோவிந்தனைத் துதி!'' என்று பாடியிருக்கிறார். சங்கராச்சாரியரே இப்படிச் சொல்ல நாம் எம்மாத்திரம்!



# தலைக்கு வந்த ஆபத்து.....

ரா. வேங்கடரத்தினம்

**வீ**ராயி பாலை விற்றுவிட்டு அப்போதுதான் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தாள். சற்று தூரத்தில் இருந்த படியே அவள் வீட்டை நோக்கினாள். வீடு திறந்து இருந்தது. அவள் திடுக்கிட்டாள். "ஒருவேளை வெளியே கிளம்புகையில் கதவைச் சாத்த மறந்து விட்டேனா?" என்று அவள் யோசித்தாள். ஏதாவது திருட்டு-புரட்டு நடந்திருக்குமோ என்று அவள் மிக்க பரபரப்பு அடைந்தாள். வெகு வேகமாக நடந்து சென்று வீட்டுக்குள் புகுந்தாள்.

தூணில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்த கறுப்பையன் அவள் கண்ணில் பட்டான். அவனுடைய கண்கள் பாதி திறந்திருந்தன. போர்வையை உடம்பு முழுவதும் சுற்றிக் கொண்டு அவன் உட்கார்ந்திருந்த நிலைமை வீராயியை ஒரேயடியாய்ப் பயமுறுத்திவிட்டது. அவனைக் கண்டதும் அவள் அப்படியே பதறிப் போய் விட்டாள். கையில் வைத்திருந்த பால் பாத்திரம்கூடக் கை தவறிக் கீழே விழுந்து நசுங்கிப் போயிற்று.

"என்ன அத்தான்?" என்று அவள் கிலேசத்துடன் கேட்டாள். அதற்குப் பதிலைக் காணோம். கறுப்பையனுடைய உடலைப் பிடித்துக் குலுக்கி அவள் மீண்டும் விசாரித்தாள். பதில் இல்லை. உடலைத் தொட்டுப் பார்த்தாள். உடம்பு கொதித்துக் கொண்டிருந்தது. ஒரு வேளை குளிர் சுரம் என்கிறார்களே, அதுதான் வந்திருக்குமோ என்று எண்ணிக் கொண்டு, "உடம்பை என்ன பண்ணுது, அத்தான்?" என்று வினவினாள் அவள். கறுப்பையன் என்னவோ முனகினான். அது அவளுக்கு ஏற்கனவே இருந்த தைரியத்தையும் கெடுத்து விட்டது. ஏனென்றால், ஒன்றுமில்லாத தலைவலிக்கெல்லாம் 'ஆஹா ஊஹூ' என்று பயமுறுத்துகிற வழக்கம் கறுப்பையனுக்குக் கிடையாது. எத்தகைய சுரமடித்தாலும் எழுந்து நடப்பவன் அவன். இப்போது அடங்கி ஒடுங்கிப் போய், வாய் திறவாமல் அவன் உட்கார்ந்திருந்தது வீராயியின் அச்சத்தை அதிகப்படுத்தியது.

அவள் உடனே டாக்டரைத் தேடிக் கொண்டு ஓடினாள். ஏழை-பாழைகள் இடத்தில் கொஞ்சம் கருணையுடன் நடந்து கொள்கிறவர் அந்த டாக்டர். "நீ போ. நான் வருகிறேன்" என்று அவளை அனுப்பிவிட்டு பின்னாலேயே அவர் காரில் வந்து இறங்கினார். வழக்கம் போல, "நாக்கை நீட்டு," "கண்ணைக் காட்டு" போன்ற உத்தரவுகளெல்லாம் இட்டு, கறுப்பையனைப் பரிசோதித்தார்.

"எட்டு ரூபாய் உன் கைவசம் இருக்கிறதா?" என்று டாக்டர் கேட்டார். அதைக் கேட்டு வீராயிக்கு மூர்ச்சை உண்டாவதுபோல இருந்தது.

"ஏழையாகிய என்மேல் கொஞ்சம் தயவு வைக்கணும். அம்புட்டு ரூபாய்க்கு நான் எங்கே போகிறது?" என்று அவள் சொல்லி நிறுத்துவதற்குள்ளேயே, டாக்டர் தொடர்ந்தாற் போலக் கூறினார்: "நான் மருந்து விலைதான் சொல்றேன். அதிகமா ஒண்ணும் கேட்கல்லே. முடியுமானால், பாரு. நான் சொல்லக்கூடியது இவ்வளவுதான்!"

"நீங்க அப்படிக் கண்டிப்பாய்ச் சொல்லக் கூடாதுங்க. நான் ஒரே சமயத்திலே அவ்வளவு பணத்துக்கு எங்கே போவது? நீங்க கொஞ்சம் எனக்காகப் பெரிய மனசு பண்ணணும்."

"அதெல்லாம் சரிதான். ஆனால் எனக்கு மருந்து சும்மா கிடைக்க வில்லையே! நான் என்ன பண்ணறது? இப்படி எல்லாருக்கும் பெரிய மனசு பண்ணிக் கொண்டே போனால் நான் தலையிலே கையை வச்சிக்கிட்டுப் போக வேண்டியதுதான்."

வீராயி காலில் விழுந்துகூடக் கெஞ்சிப் பார்த்தாள். டாக்டர் அசைந்து கொடுக்க வில்லை. "அது எனக்குத் தெரியாது. என்னத்தையாவது அடகு வச்சாவது கொண்டு வா. நான் வைத்தியம் பண்றேன்" என்று அழுத்தத் திருத்தமாய்ச் சொல்லி விட்டு, அடுத்த நிமிஷம் காரில் அரை பர்லாங் தூரத்திற்கப்பால் போய்க் கொண்டிருந்தார் அவர்.

மோட்டார் புழுதியில் மறையும் வரை அந்தத் திக்கையே பார்த்துக் கொண்டு நின்றாள் வீராயி. அவளுக்கு இன்னது செய்வதென்று விளங்கவில்லை. என்னத்தை அடகு வைப்பது? அவளிடம் உள்ள எந்த அபூர்வ வஸ்துவைப் பெற்றுக் கொண்டு, எந்த முட்டாள் எட்டு ரூபாயைக் கொடுப்பான்? டாக்டர் சொன்னது நூற்றுக்கு நூறு அசம்பாவிதமானது என்று அவளுக்குத் தோன்றியது.

அப்பொழுது அவளது சிந்தனையைக் குறுக்கிடுவது போல, கொல்லைப்புறத்திலிருந்து ஒரு ஆட்டின் குரல் 'மே...' என்று ஒலித்தது. அது அவளுடைய ஆடுதான். அதன் பெயர் சடையன். அந்தச் சமயத்தில் ஆடு கத்தியது ஒரு பெரிய அபசகுனம்போலத் தோன்றியது. கழுத்தைத் திருகி அதைக் கொன்று விடலாமா என்றுகூட அவளுக்கு ஆத்திரம் உண்டாயிற்று. மறுக்ஷணம் வீராயி தன்னைத்தானே திருத்திக் கொண்டாள். "சீ, சடையன் என்ன செய்யும்? 'தன்னை அடகு வைத்தோ, விலைக்கு விற்றோ பணம் சேர்த்து விடலாமே!' என்று அது எனக்குத் தன்னுடைய குரலினால் ஞாபகப்படுத்துகிறது போல் இருக்கிறது! பாவம். தன் எசமானனுக்கு உடம்பு சரியாக இல்லையென்றால், அதற்கு மட்டும் கவலை இராதா, என்ன?—"

வெள்ளாட்டை விற்றால் ஏழெட்டு ரூபாய் நிச்சயமாய்க் கிடைக்குமே என்ற எண்ணம் திடீரென்று அவளுக்குத் தோன்றியது. ஆனால் சடையனைப் பிரிந்திருப்பது எப்படி? தன்னால் முடிந்தாலும் கறுப்பையனால் அது முடியாது என்பது வீராயிக்கு நன்றாய்த் தெரியும். அவள் கண்ணுக்கு முன் பழைய சம்பவங்கள் யாவும் ஒரு முறை தோன்றின.

• • •

அப்போது வீராயி மங்கைப் பருவம் அடைந்த சமயம். அவளை வளர்த்து வந்த அவள் பாட்டன் "இனிமேல் நீ வெளியே எங்கேயும் போகக் கூடாது" என்று கண்டிப்பாக உத்தரவு போட்டிருந்தான். அதன்படி அவள் வீட்டை விட்டு அசையாமல் அங்கேயே இருந்தாள்.

ஒருநாள் கொல்லைப் புறத்தில் ஏதோ ஓசை கேட்பதுபோல் தோன்றியது. சில நாட்களுக்கு முன்பு அவள் வெகு ஆசையோடு நட்ட மருதாணிச் செடி அங்கேதான் இருந்தது. எனவே, செடி அசையும் ஓசை கேட்டதும் அவள் விழுந்தடித்துக் கொண்டு அங்கு ஓடினாள். அவள் எதிர்பார்த்தது சரியாய் இருந்தது. அங்கு ஒரு வெள்ளாடு செடியைச் சுவைத்துக் கொண்டிருந்தது. வீராயிக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. அது யாருடையதாய் இருக்கும் என்று அவள் யோசித்துப் பார்த்தாள். அக்கம் பக்கத்தில் ஒருவரிடமுமே வெள்ளாடு கிடையாதே!



வந்தது வரட்டும் என்று துணிச்சலுடன் அவள் ஆட்டைப் பிடித்து இழுத்து வந்தாள். கூரையிலிருந்து தொங்கிக் கொண்டிருந்த கயிறு ஒன்றைப் பிடித்து இழுத்தாள். அது கையுடன் வந்தது. அதன் ஒரு நுனியை ஆட்டின் கழுத்திலும், மற்றொன்றைத் தூணுப்பிற்கும் நடுக்கூடத்து மூங்கிலிலுமாய்க் கட்டிப் போட்டாள். சற்று நேரத்தில் ஆட்டைத் தேடிக்கொண்டு யாரோ ஒருவன் வந்து நின்றான்.

"இந்தப் பக்கமாக ஒரு வெள்ளாட்டுக் குட்டி வந்திச்சா?" என்று அவன் கேட்டான். வீராயி வெளியே வந்து எட்டிப் பார்த்தாள். வந்தவன் இடுப்பில் இரண்டு கையையும் பரத நாட்டியம் ஆடப் போவதுபோல் வைத்துக்கொண்டு, தன்னையே விழித்துப் பார்த்துக்கொண்டு நின்றது அவளுக்கு என்னவோபோல் இருந்தது. உண்மையில், அவளுக்கும் அவனையே வைத்த கண்ணை அகற்றாமல் பார்த்துக் கொண்டிருக்கலாம் போல இருந்தது. ஆனால், எல்லாப் பெண்களுக்கும் இயற்கையாயுள்ள நாணம் குறுக்கிட்டது. இருந்தாலும் தைரியமாய், "ஆமாம், ஒரு ஆடு வந்திச்சு" என்று தன் விழிகளை அவன்மேல் வீசியவாறு, ஒரு நாழிகை கழித்து பதில் சொன்னாள்.

"அது எங்கே இப்போ?"

"உள்ளே இருக்கு. நாங்க அதை நறுக்கித் தின்னுப்புடுவோமா? உங்க ஆடு யாருக்கு வேணும்?"

"கோவிச்சுக்காதே அம்மா!" என்று அவன் கூறியதும் வீராயி, "கோவிச்சிக்காமல், பின்னே கும்பிடுவாங்களா? ஊரான் வீட்டு பயிர்ப் பச்சையெல்லாம் நாசமாகும்படி, ஆட்டை ஒரு மனுசன் இப்படியா அவிழ்த்து விடறது? என் மருதாணிச் செடி பாழாய்ப் போச்சே! ஒரு இலையை விடாமல், அம்புட்டையும் தின்னுப்புட்டுதே!" என்று சொல்லிவிட்டு, அடுத்த நிமிஷம் தன் முகத்தை மறுபுறம் திருப்பிக்கொண்டு நின்றாள்.

அவள் தன்னை வம்புக்கிழுக்கிறாள் என்பது அவனுக்கு நன்றாய்த் தெரிந்தது. அதனால் அவனும் சளைக்கவில்லை. "மகராசி, நீ கோவிச்சுக்காதே. நான் வேறொரு மருதாணிச் செடி கொண்டு வந்து நட்டு, வேணுமின்னா நானே மருதாணி அரைச்சு அம்மா கையிலே தடவிப்புடறேன். சம்மதம் தானே?" என்று

அவன் கேட்டான். அந்தப் பேச்சு தனக்குப் பிடிக்காதது போல் வீராயி முகத்தை வைத்துக் கொண்டு, "சும்மா ஏன் பேசுநீர், ஐயா? ஆட்டுக்குட்டி வேணுமின்னு, அவிழ்த்துக் கிட்டுப் போவதை விட்டுப் புட்டு, என்னவோ வெல்லாம் பேசுறீரே!" என்று சொன்னான்.

"நானா முதல்லே பேசினேன்? ஒரு மனுசன் 'இப்படிப் பண்ணலாமா?' 'அப்படிப் பண்ணலாமா?'ன்னு நீ தானே ஆரம்பிச்சே?" என்று அவன் கேட்ட கேள்வி வீராயிக்கு உண்மையானதென்று பட்டது. தனக்கு அவனுடன் பேச அவ்வளவு துணிவு ஏது என்பது அவளுக்கே புரியவில்லை. இருவரும் வெகு நேரம் வரை இப்படியே சண்டை போட்டுக்கொண்டு, ஆனால் உள்ளூர அன்பொழுகப் பேசிவிட்டுப் பிரிந்தனர். வீராயி கறுப்பையனைக் கொஞ்ச தூரம் வரை கொண்டு போய் விட்டுத்தான் வந்தாள்.

கறுப்பையனது சிநேகம் வீராயிக்கு மிகவும் பிடித்திருந்தது. தனக்கு எப்படி இந்த உலகத்தில் பாட்டன்தான் ஒரே உறவினனோ, அதேபோலக் கறுப்பையனுக்கு அவனுடைய தாயைத் தவிர வேறு உறவினர் எவரும் கிடையாது. அவனது அம்மாவிற்குக் கொஞ்ச நாளாக உடம்பு சரியாய் இல்லையாம். 'ஆட்டுப் பால் கொடுத்துப் பார்' என்று அக்கம் பக்கத்தவர்கள் சொன்னதால் அதை முயன்று பார்க்கலாம் என்று தான் அவன் அந்த வெள்ளாட்டைச் சந்தையிலிருந்து வாங்கி வந்திருந்தான்.

ஆட்டினால் அம்மா பிழைக்கவில்லை; ஆனால் அவனுக்கு வீராயி கிடைத்து விட்டாள். விரைவில் அவர்கள் இருவருக்கும் கல்யாணம் நடந்தது. தன்னைக் கறுப்பையனுடன் சேர்த்துவைத்த அந்த ஆட்டையா விற்பது என்று வீராயி இப்போது யோசித்தாள்.

* * *

வெகு நேரம் வரை யோசித்துப் பார்த்தாள். அருகில் கறுப்பையன் படுத்த படுக்கையாய்க் கிடந்தான். சடையனை விற்பதைத் தவிர வேறு வழியில்லை என்று அவளுக்குத் தோன்றியது. சந்தையில் கொண்டு போய் அதை விற்பதென்றால், நாலைந்து ரூபாய்க்கு மேல் கேட்க மாட்டார்கள். ஆகவே, ராமத்தேவனுக்கு விற்பதென்று நிச்சயித்துக் கொண்டாள். ராமத்தேவனுக்கு வெகு நாளாகச் சடையன்மேல் ஒரு கண் இருந்தது. "நான் எட்டு ரூபாய் தருகிறேன். ஆட்டை எனக்கு விற்று விடு" என்று அவன் வீராயியிடம் அடிக்கடி சொல்லியிருக்கிறான்.

அவள் சடையனை அழைத்துக்கொண்டு ராமத்தேவன் வீட்டை நோக்கி நடந்தாள். அந்த வீட்டு வாசலுக்கு வந்ததும், ஆடு மருண்டு நின்றது. வீராயிக்கு ஒரு கணம் திரும்பிப் போய்விடலாமா என்றுகூடத் தோன்றியது. ஆனால் கறுப்பையன் பிழைத்தாக வேண்டுமே!



வீராயி அவனிடம் ஆட்டை விற்றுவிட்டு, எட்டு ரூபாயையும் வாங்கிக் கொண்டு நடந்தாள். சடையனை விட்டுப் பிரிவது அவளுக்குப் பெரும் வேதனையாக இருந்தது. 'நடந்த காரியத்தை நினைத்து என்ன பிரயோஜனம்?' என்று அவள் எண்ணி மனதைத் தேற்றிக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தாள்.



அப்போது 'பூம்!' 'பூம்!' என்ற சத்தம் கேட்டது. கார் ஒன்று அவளைக் கடந்து சென்றது. வீராயி தற்செயலாக அதைப் பார்த்தாள். டாக்டர் உட்கார்ந்திருந்தார். 'பணம் இருக்கிறது' என்று கைதட்டிக் கூப்பிடலாமா என்று அவள் நினைத்தாள். ஆனால் அதற்குள் கார் மறைந்துவிட்டது.

சுற்றி திரும்பி, குடிசை வாசலுக்கு வந்ததும் அவளுக்கு ஓர் ஆச்சரியம் உண்டாகி விட்டது. டாக்டரின் கார் அங்கே தெருவை அடைத்துக் கொண்டு நின்ற வண்ணம் இருந்தது. அவள் ஆவலுடன் உள்ளே நுழைந்தாள். டாக்டர் அங்கே கறுப்பையனுக்கு ஊசி போட்டுக்கொண்டிருந்தார். வீராயி அப்படியே சிலை போல் பிரமித்துப் போய் விட்டாள்.

டாக்டர் சொன்னார்: "இந்த மாசம் முடியறதுக்குள்ளே, நீயும் உன் புருஷனுமாய்ச் சம்பாதிச்சு எனக்கு எட்டு ரூபாய் கொண்டு வந்து தந்தாகணும்."

"நீங்க மவராசனாய் இருக்கணும். அப்படியே செய்யிறோம்" என்றாள் வீராயி.

* * *

கறுப்பையன் பிழைத்து விட்டான். அவனுக்கு வந்த ஆபத்து அனேகமாக நீங்கிவிட்டது. ஆனால் தன்னுடைய அன்புக்குப் பாத்திரமான சடையனின் கதி என்னவாகுமோ? அதைக் காப்பாற்ற முடியாதா? — வீராயி ஓரே ஓட்டமாக ஓடினாள். "சாமி, ஆண்டவனே, சடையன் உயிரோடிருக்கணும்!" என்று பிரார்த்தித்துக்கொண்டே ராமத்தேவன் வீட்டை நோக்கி விரைந்தாள். அவள் கண் எதிரே ஒரு கோரச் சித்திரம் நர்த்தனம் ஆடியது. ராமத்தேவன் அந்த ஆட்டை வளர்ப்பதற்காக வாங்கவில்லை. தன்னுடைய நாக்கின் ஆசையைத் திருப்தி செய்து கொள்வதற்காகத்தான் அதை வாங்கினான். இது அவளுக்கு நன்றாகத் தெரியும். இப்போது சடையன் உயிரோடு இருக்குமா? ராமத்தேவன் நீண்ட வெட்டரிவாளை வைத்துக் கொண்டு சடையனின் கழுத்தை நோக்கிக் குறி பார்ப்பது போல இருந்தது அவளுக்கு. அவள் நடுங்கிப் பதை பதைத்தாள்.

ஒரு கொடியில் ஓட்டமும் நடையுமாக அவன் வீட்டை அடைந்தாள்.

வாசலில் நின்று கொண்டிருந்த ராமத்தேவன் வீராயியைப் பார்த்ததும், "நீ என்னை ஏய்க்கலாமின்னு நெனச்சியா?" என்று கோபத்துடன் கேட்டான். வீராயி ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

"ஒரு நாளும் இல்லாமல், இன்னிக்கி ஆட்டை விற்க வந்தபோதே, எனக்கு உன்மேல் சந்தேகம்தான். வியாதிக்கார ஆட்டை என் தலையிலே கட்டலாமின்னு பார்த்தியா?"

"அதற்கு ஒரு வியாதியும் இல்லையே!"

"கத்துவதிலிருந்தே தெரியல்லையா, அதுக்கு உடம்பு சரியில்லேன்னு? இழுத்துக்கிட்டுப் போ, அதை!"

வீராயிக்கு விஷயம் விளங்கியது. "ஓஹோ, உடம்பு சரியில்லாததனால் தான் அது அப்படி அலறியதோ?" என்று சொல்லிக் கொண்டாள். அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. "எப்படியும் அவன் ஆட்டைத் திருப்பிக் கொடுக்கப் போகிறான். கொஞ்சம் கிராக்கி பண்ணிக் கொள்ளுவோமே" என்று அவளுக்குத் தோன்றியது.

"அப்பொழுதே நீ ஏன் சரியாய்ப் பார்க்கவில்லை? ஒரு முறை வித்த சாமானை மறுபடி வாங்கிக் கொள்வது உண்டா?" — வீராயி ராமத்தேவனைக் கிட்டத்தட்ட அழ வைத்து விட்டாள்.

"மவராசி, நீ இரண்டு ரூபாய் குறைச்சுக் கொடுத்தாலும், பரவாயில்லை. வாங்கிக்கறேன். உனக்கு ரொம்பப் புண்ணியம் உண்டு. உன் வியாதிக்கார ஆட்டை ஓட்டிக்கிட்டுப் போ" என்றான் அவன்.

வீராயிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. ஒரு மணி நேரத்திற்கு முன்பு, சடையனை விற்று எட்டு ரூபாய் சம்பாதித்தாள். இப்போது ஆறு ரூபாய் கொடுத்து, அதை யமன் கையிலிருந்து மீட்டு விட்டாள். நிகர லாபமான இந்த இரண்டு ரூபாயை ஆடு — மாடு டாக்டரிடம் விட்டெறிந்தால், சடையனது உடம்பையும் குணமாக்கி விடலாம்!

வீராயி மகிழ்ச்சியுடன், மடியில் இரண்டு ரூபாயும், தோளில் சடையனுமாக வீட்டை நோக்கிச் சென்றாள்.

# மூன்று சகோதரிகள்

ரா.ந.

முன்னொரு காலத்தில் பாரசீக நாட்டை ஒரு சுல்தான் நீதி வழுவாமல் ஆண்டு வந்தான். தனது ஆட்சியில் குடிகளுக்குக் குறைகள் இருக்கின்றனவா என்பதை அறிவதற்காக அவன் இரவில் மாறு வேஷம் போட்டுக் கொண்டு தலைநகரத்தைச் சுற்றி வருவது வழக்கம்.

ஒரு நாள் அவன் தன் முதல் மந்திரியையும் அழைத்துக்கொண்டு நகரைச் சுற்றி வந்தான். அப்படிச் சுற்றி வருகையில் ஒரு வீட்டில் பேச்சுக் குரல் கேட்டது. உடனே சுல்தான் அங்கு நின்றான். வீட்டு வாசற்படி சற்று திறந்திருந்தது. வெளியிலிருந்த படியே உள்ளே நடக்கும் பேச்சைக் கேட்டான்.

அந்த வீட்டிற்குள் மூன்று பெண்கள் இருந்தனர். அவர்கள் தங்கள் மனதில் குடிகொண்டிருக்கும் ஆசையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அம் மூவரில் பெரியவள் கூறியதாவது: "நமது சுல்தானின் ரொட்டிக்காரனைக் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும் என்பதுதான் என் ஆசை. ஏனெனில், அவன் சுல்தானுக்காகத் தயார் செய்யும் அருமையான ரொட்டிகளையும், தித்திப்புப் பண்டங்களையும் சாப்பிடலாம் அல்லவா?"

இதைக் கேட்ட இரண்டாவது பெண் கூறியதாவது: "அக்கா! போயும் போயும் ரொட்டிக் கடைக்காரனைக் கலியாணம் செய்துகொள்ள ஆசைப்பட்டாயே! என் ஆசை என்னவென்றால், சுல்தானின் தலைமை சமையற் காரனையே கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்பதுதான். அப்போதுதான் அவன் சுல்தானுக்காகத் தயார் செய்யும் சுவையான பதார்த்தங்களைச் சாப்பிடலாம். ரொட்டிக்காரன் ரொட்டிகள் கொடுத்தாலும் அதைச் சமையற்காரன் தானே சுல்தானுக்குக் கொடுக்க வேண்டும்!" கடைசிப் பெண் இதைக் கேட்டுச் சிரித்தாள். வெளியிலிருந்து கவனித்த சுல்தானுக்கு இந்தக் கடைசிப் பெண் மிகவும் அழகும் அறிவும் வாய்ந்தவள் என்பது தெரிந்தது. அவள் தனது இரு சகோதரிகளையும் பார்த்துக் கூறினாள்: "அக்காமார்களே! உங்கள் ஆசை இவ்வளவு அற்பமாயிருக்கும் என்று நான் எண்ணவேயில்லை. ரொட்டிக்காரனையும், சமையற்காரனையும் விட உயர்ந்த மனிதர்கள் இருப்பதாக உங்களுக்குத் தோன்றவே இல்லையா? போகட்டும். என் ஆசையைத் தெரிவிக்கிறேன். கேட்டுவிட்டுக் கேலி செய்யாதீர்கள். இவ்வுலகில் நமது சுல்தானை விடச் சிறந்தவர்கள் யாரும் கிடையாது என்று ஜனங்கள் கூறுகிறார்கள். எனக்கு அதிர்ஷ்டமிருந்தால், நமது சுல்தானின் ராணியாக வேண்டுமென ஆசைப்படுகிறேன்."

இதைச் சொல்லிவிட்டு அவள் வெட்கத்தால் தலை குனிந்தாள்.

இந்த மூன்று சகோதரிகளின் பேச்சைக் கேட்டுச் சுல்தான் சந்தோஷமடைந்தான். மூன்று பேர்களுடைய ஆவலையும் பூர்த்தி செய்து விடுவது என்று முடிவு செய்தான். உடனே அருகில் இருந்த தன் மந்திரியைப் பார்த்து "மந்திரி, பொழுது விடிந்ததும் இம் மூன்று சகோதரிகளையும் நமது தர்பாருக்கு அழைத்துவர ஏற்பாடு செய்யும்" என்று கட்டளையிட்டான்.

அடுத்த நாள் காலையில் முதல் மந்திரி நேராக அவ் வீட்டிற்குச் சென்று, மூவரையும் சுல்தான் அழைப்பதாகத் தெரிவித்து, அவர்களைத் தர்பாருக்கு அழைத்து வந்தான்.

மூவரும் பயத்தால் நடுநடுங்கி, முகம் வெளுத்து நின்றார்கள். அவர்கள் நிற்கும் நிலைமையைப் பார்த்த சுல்தான், "பெண்களே! பயப்பட வேண்டாம். உங்கள் ஆசை என்னவென்பதை நான் அறிவேன். அதை நிறைவேற்றுவதற்கே உங்களை இங்கே



அழைத்து வரச்சொன்னேன். உங்கள் விருப்பம் போலவே உங்களுக்கு விவாகம் நடத்தி வைக்கிறேன்" என்றான்.

அந்தப் பெண்கள் மூவரும் அதைக் கேட்டு மிகவும் ஆச்சரியம் அடைந்தார்கள். தாங்கள் பேசிக் கொண்டிருந்தது அரசனுக்கு எப்படிக் கேட்டது என்று அவர்களுக்கு விளங்கவில்லை.

மூன்று கலியாணங்களும் ஒரே நாளில் நடந்தன. சுல்தானுக்கு மனைவியாக வாய்த்த மூன்றாவது சகோதரியின் விவாகம் வெகு சிறப்பாக நடந்தது. மற்ற இருவருடைய திருமணம் அவர்களுடைய கணவன்மார்கள் அந்தஸ்திற்கு ஏற்றாற்போல் நடந்தன.

கலியாணம் நடந்த பிறகுதான் முதல் இரண்டு சகோதரிகளுக்கும் தாங்கள் சாதாரண வேலைக்காரர்களின் மனைவிகள் என்பதும், தங்கள் தங்கை பட்டத்து ராணி என்பதும் தெரிந்தது. சுல்தானின் மனைவியாக வாழும் தங்கள் தங்கையின் ஆடம்பரத்தையும், அவளுக்குப் பணிவிடை செய்யும் வேலையாட்களின் எண்ணிக்கையையும் கண்டு அவர்கள் இருவரும் பொறாமைப்பட ஆரம்பித்தனர். அவளுக்கு எப்படியாவது கஷ்டத்தையும் மன வருத்தத்தையும் உண்டாக்குவதற்குச் சூழ்ச்சி செய்தனர். ஆனால் அவர்கள் தங்கள் மனதிலிருந்த பொறாமையையும் வெறுப்பையும் தங்களுடைய தங்கைக்குக் காட்டவில்லை. அவள் மீது மிகவும் அன்பாயிருப்பது போலவே பாசாங்கு செய்தார்கள். தங்கள் தீய எண்ணத்தைக் காரியத்தில் காட்டுவதற்குத் தக்க தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

நாளடைவில், பட்டத்து ராணியாகிய அவர்கள் தங்கைக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அப்போது இரு சகோதரிகளும் தங்கள் தங்கையைப் பாதுகாக்கவும் பாராட்டவும் வந்திருப்பதாகச் சொல்லிக் கொண்டு அரண்மனைக்குச் சென்றார்கள். குழந்தை மிகவும் அழகாயிருந்தது. முகம் நிலாபோல் ஒளி வீசிற்று. இரு சகோதரிகளும் அந்தக் குழந்தையைச் சுருட்டி ஒரு கூடையில் போட்டு அரண்மனைக்கு அருகிலிருந்த கால்வாயில் மிதக்க விட்டனர். இப்படிச் செய்துவிட்டு, ஒரு செத்துப்போன நாய்க்குட்டியை எடுத்துக் கொண்டு போய் சுல்தானுக்குக் காட்டி அது



# சித்திராங்கன் விசித்திரம்



11

சித்திராங்கனுக்கு ஒரு அதிசயக் கரிக்கட்டி கிடைத்தது. அந்தக் கரிக்கட்டியால் அவன் சுவரில் எழுதிய சித்திரங்கள் உயிர் பெற்று வந்தன.



குளிக்கப்போன பையன்கள், "மரத்தில் துணிகளை மாட்டி வைக்கக் கொம்பு இல்லையே" என்றார்கள். சித்திராங்கன் ஒரு மான் எழுதினான். அது உயிர்பெற்று வந்து...



மரத்தின் பக்கத்தில் மறைந்து நின்றது. "டேய் பசங்களா, இந்த மரக் கொம்பில் நான்தான் துணிகளை மாட்டிக் கொள்வேன். உங்களுக்கு இடம் இல்லை. போங்கள்" என்று சொல்லி ஒருவர் குளத்தில் இறங்கினார்.



மானும் தண்ணீர் குடிக்கக் குனிந்தது. கொம்பில் மாட்டியிருந்த துணிகள் குளத்தில் விழுந்து நனைந்தன. "அடடா, அது மானுடைய கொம்பா? மரக் கொம்பு என்றல்லவா நினைத்து விட்டேன்" என்று...



அவர் கூச்சலிட்டார். அவர் கூச்சலில் மிரண்ட மான் ஓட்டம் பிடித்தது. அந்தச் 'சீ மானும்' அதைத் துரத்திக் கொண்டு ஓடினர்.

தான் தங்கள் தங்கைக்குப் பிறந்தது என்று சுல்தானிடம் கூறினார்கள்.

இதைக் கேட்ட சுல்தானுக்கு அளவுக்கு மீறிய கோபம் பொங்கிவந்தது. இம்மாதிரி செத்த நாயைப் பெற்ற தன் மனைவியைக் கொன்றுவிட வேண்டும் என்று எண்ணினான். சுல்தான் அவ்வாறு செய்வது பெருந்தவறு என்று முதல் மந்திரி சொல்லவே, சுல்தானின் கோபம் அடங்கியது. தன் மனைவியையும் அவன் மன்னித்தான்.

அந்தத் தீய சகோதரிகள் மிதக்கவிட்ட கூடை அரண்மனை நந்தவனத் தலைவன் வீட்டருகில் சென்றது. அந்த நந்தவனத் தலைவன் பாரசீகப் பிரபுக்களில் ஒருவன். தன் வீட்டருகில் கால்வாயில் ஒரு கூடை மிதந்து வருவதை அவன் கண்டதும் தனது தோட்டக்காரர்களில் ஒருவனை விட்டு அந்தக்கூடையை எடுத்து வரச் சொன்னான். கூடையைத் திறந்து பார்த்ததும் அதில் சந்திர பிம்பம் போல் அழகிய ஒரு குழந்தை இருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தான். அவனுக்குக் குழந்தை கிடையாது. ஒரு குழந்தை வேண்டுமென்று வெகு நாளாக ஆசைப்பட்டுக் கொண்டிருந்தான். தெய்வாதீனமாக அந்தக் குழந்தை கிடைக்கவே அதைத் தன் மனைவியிடம் எடுத்துச் சென்று சொந்தக் குழந்தை போலவே வளர்க்கச் சொன்னான்.

அந்தப் பிரபுவின் மனைவிக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தன் கணவன் கொண்டுவந்த குழந்தையை மகிழ்ச்சியுடன் வாங்கி உச்சி மோந்து முத்தமிட்டு மார்போடு அணைத்துக் கொண்டான். குழந்தையை மிக்க அன்புடன் வளர்த்து வந்தான்.

நந்தவனத் தலைவனுக்கு அது ராஜ குடும்பக் குழந்தையாகத்தானிருக்க வேண்டும் என்று ஒரு சந்தேகம் இருந்தது. ஆனால் அரண்மனை விஷயத்தில் தான் தலையிடலாகாது என்று நினைத்து அந்தச் சமாசாரத்தை சுல்தானுக்குத் தெரிவிக்காமல் இருந்துவிட்டான். மேலும் சுல்தானுக்கு உண்மை தெரிந்து அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு விட்டால் அவன் என்ன செய்வது? ஆகையால் அவன் அந்த ரகசியத்தை யாருக்கும் தெரிவிக்க வில்லை.

½ இல் முடியும் எந்த எண்ணையும் அதே எண்ணைக்கொண்டு பெருக்க ஒரு சுருக்கு வழி யிருக்கிறது. கண்டு பிடியுங்கள் பார்க்கலாம்!

விடை அடுத்த இதழில்:

சென்ற இதழில் வெளி வந்த கணக்குக்கு விடை: 32.

அடுத்த வருஷம் பட்டமகிஷிக்கு இன்னொரு அழகான ஆண் குழந்தை பிறந்தது. இந்தத் தடவையும் அந்தத் தீய சகோதரிகள் வந்து, குழந்தையை எடுத்து முன் போலவே கூடையை மூடிக் கால்வாயில் மிதக்க விட்டுவிட்டனர். பிறந்த குழந்தைக்குப் பதிலாக ஒரு செத்த பூனையைச் சுல்தானிடம் காட்டி அது தான் தங்கள் தங்கைக்குப் பிறந்தது என்று சாதித்து விட்டனர்.

இதைக் கேட்ட சுல்தான் தன் மனைவியைக் கொன்றுவிட எண்ணினான். ஆனால் முதல் மந்திரி அவ்வாறு செய்யக் கூடாது என்று சமாதானம் கூறவே சுல்தான் தன் மனைவியை மன்னித்தான்.

அந்த இரண்டாவது குழந்தையையும் நந்தவனத் தலைவன் கண்டெடுத்துத் தன் மனைவியிடம் கொடுத்து அதையும் முதல் குழந்தையைப் போல அன்புடன் வளர்க்கும்படி கூறினான்.

ஒரு வருஷத்துக்குப் பிறகு பட்டமகிஷிக்கு மூன்றுவது குழந்தை பிறந்தது. இந்தத் தடவை பிறந்தது பெண். மற்றக் குழந்தைகளைவிட இது மிக்க அழகாக இருந்தது. (தொடரும்)

# ஐயோ, போச்சே!



பிரபல அமெரிக்கக் கோடீஸ்வரரான ராக்பெல்லர் ஒரு சிறிய நஷ்டம் நேர்ந்து விட்டாலும் மிக்க மன வேதனைக்கு உள்ளாவாராம். ஒரு சமயம் அவர் நாற்பதினாயிரம் டாலர் பெறுமான தானியத்தைக் கப்பலேற்றி வெளி நாட்டுக்கு அனுப்பினாராம். கப்பல் போய்க் கொண்டிருந்த பிரதேசத்தில் பெரிய புயல் அடிப்பதாக அவருக்குச் செய்தி வந்ததாம். அவருக்குக் கவலை உண்டாயிற்றாம். "ஐயையோ, இன்ஷியூர் செய்யவில்லையே!" என்று தவித்தாராம். இன்ஷியூர் செய்ய 150 டாலர் செலவாகுமே என்பதற்காகத்தான் அவர் இன்ஷ்யூர் செய்யவில்லை. இன்ஷியூர் செய்யாதது பிசகு என்று அப்புறம் தான் அவருக்குத் தோன்றியது. உடனே ஆள் அனுப்பி 'இந்த நேரத்தில் எந்தக் கம்பெனியாவது இன்ஷியூர் செய்யுமா?' என்று பார்க்கச் சொன்னாராம். ஒரே ஒரு கம்பெனியைத் தவிர வேறு யாரும் அதற்குத் தயாராக இல்லை. போன ஆசாமி அதில் இன்ஷியூர் செய்து விட்டுத் திரும்பினார். ஆனால் அவர் திரும்பி வந்து இன்ஷ்யூர் செய்துவிட்ட செய்தியைச் சொன்னதும் ராக்பெல்லர் முன்னைக் காட்டிலும் "ஐயோ! போச்சே!" என்று அலறினாராம். காரணம் விசாரித்த போது, கப்பல்கள் ஜாக்கிரதையாகப் போகவேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்தன வென்று தெரிய வந்தது. பின்னே ராக்பெல்லர் எதற்காக அலறினார் என்றால், "அனாவசியமாக இன்ஷியூர் செய்யச் சொன்னேனே? நாற்றைம்பது டாலர் அனியாயமாய்ப் போச்சே!" என்பதற்காகத்தான்.



# தங்கம் நல்லவள்!

ரா. வீ.

"தங்கம்! தங்கம்! என்ன செய்து கொண்டிருக்கிறாய்? இன்னும் காப்பி போடவில்லையா?"

உள்ளிருந்து பேச்சே வரவில்லை.

"தங்கம்! உன்னைத்தானே? இங்கு வாயேன்! ஒரு சேதின்னு?"

அப்பொழுதும் பதில் இல்லை.

"என்ன? இன்றைக்கு மௌன விரதமா, என்ன?"

"போதுமே, உங்கள் பேச்சு! கச்சு, கச்சென்று என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது?"

"நான் கச்சு கச்சென்று பேசறேனா? உன்னிடம் பேசாமல் வேறு யாரிடம் பேசுகிறது? தெருவில் வருகிறவன் போகிறவனோடு பேச முடியுமா?"

"எனக்கு என்ன தெரியும்? தெருவில் வருகிறவன் போகிறவனோடு எல்லாம் கூடப் பேசுவீர்களோ, என்னமோ! இல்லாவிட்டால் உங்கள் சுபாவம் இவ்வளவு கெட்டுப் போயிருப்பானேன்?"

"பேஷ்! பேஷ்! உன்னைக் கல்யாணம் செய்து கொண்டது போதாது என்று 'ஊர் சுற்றி, காலாடி, போக்கிரி' என்று பட்டம் பெறுவதுதான் பாக்கியாயிருந்தது. இன்று அதுவும் கிடைத்து விட்டது!"

அப்புறம் அவள் வாய்திறக்கவில்லை.

"ஊர் சுற்றி என்கிற பட்டம் கொடுத்ததோடு பேச்சை நிறுத்திக் கொண்டு பேசாமடந்தையாகி விட்டாயே! இப்படி நீ பேசாமல் இருந்தால் நான் வந்து உன்னை......"

"கிட்ட வந்து ஏதாவது விஷமம் கிஷமம் பண்ணினீர்களானால் இரைந்து கூச்சல் போட்டு விடுவேன். தெரியுமா, சேதி? அப்புறம் அம்மா என்ன எண்ணுவாள் என்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள்!"

"என்ன நினைப்பாள்? திரும்பவும் உனக்கு 'ஹிஸ்டீரியா' வந்து விட்டதோ என்றுதான் நினைப்பாள்!"

"ஆமாம்! நான் 'ஹிஸ்டீரியா' வியாதிக்காரிதான்; பைத்தியக்காரிதான்; சிடுமூஞ்சிதான்! என்னைப் பிடிக்கவில்லை என்றால் உங்கள் மனதுக்குப் பிடித்தவளாக இன்னொருத்தியைப் பார்த்துக் கல்யாணம் செய்து கொள்ளுங்களேன்! யார் வேண்டாம் என்று தடுத்தார்கள்?"

"உன்னைக் கல்யாணம் செய்துகொண்டு நான் என்ன சுகத்தைக் கண்டேன், இன்னொரு கல்யாணம் செய்து கொண்டு அதே தவறை மறுபடியும் செய்வதற்கு? நான் ஒன்றும் அவ்வளவு பைத்தியம் இல்லை!"

"அப்பாடா! இப்பொழுதாவது மனம் விட்டு உண்மையைச் சொன்னீர்களே!"

"ஆமாம்! அப்படி நான் என்னத்தைச் சொல்லிவிட்டேனாம்?"

"உருப்படாத உதவாக்கரையான உன்னைக் கல்யாணம் செய்து கொண்டு நான் படும் கஷ்டம் போதாதா என்றுதான்!"

"ஐயையோ! நான் அப்படி எங்கே சொன்னேன்? உன்னிடம் கேலியாகப் பேசுவதுகூடத் தப்புப் போலிருக்கிறது!"

"சொல்வதையும் சொல்லி விட்டு எதற்காக வார்த்தையை மாற்றப் பார்க்கிறீர்கள்?"

"சரி! நான் சொன்னது என்னவோ உண்மைதான். உனக்கு என்ன செய்ய வேண்டும் என்று தோன்றுகிறதோ அதைச் செய்து கொள்! அவ்வளவுதானே?"

"கையால் ஆகாத நான் என்னத்தைச் செய்ய முடியும்? அப்பா அம்மா உயிரோடு இருந்தாலாவது இரண்டு நாள் கோபித்துக் கொண்டு அவர்களிடம் போயிருக்கலாம். இருக்கும் அண்ணன் தம்பிகளில் யாருமே நான் உயிரோடு இருக்கிறேனா, செத்துப் போய் விட்டேனா என்று எட்டிக் கூடப் பார்க்கவில்லை. இப்படி அனாதையாகக் கிடக்கும் நான் என்னத்தைச் செய்யக் கிடக்கிறது? ஏதாவது குளம் குட்டையில் விழுந்து வேண்டுமானால் சாகலாம்!"

"மானம் உள்ளவர்கள் சாவது என்றால் குளம் குட்டை எதற்கு? ஒரு உத்தரணித் தண்ணீரே போதுமே!"

"சொல்லுங்கள், சொல்லுங்கள்! உங்களுக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்லுங்கள். பகல் முழுவதும் அம்மாவின்

பரிகாசம்! பொழுது சாய்ந்து விட்டால் உங்கள் வசவு! என் தலையெழுத்து இப்படி இருக்கும் பொழுது யாரை நொந்துதான் என்ன பயன்?"

"இந்த நீலிக் கண்ணீர் எல்லாம் அப்புறம் ஆகட்டும். என்ன நடந்தது? சொன்னால் அல்லவா தெரியும்?"

"உங்களுக்கு என்ன? குடித்தனத்தில் கொஞ்சமாவது அக்கறை இருந்தால்தானே? காலையில் எழுந்ததும் ஆபீஸுக்குப் போக வேண்டியது. சாயந்திரமானால் வீட்டுக்கு வரவேண்டியது. அப்புறம் சாப்பிட வேண்டியது; தூங்க வேண்டியது; இது தானே உங்கள் வேலை?"

"ஆமாம், அதற்காக என்ன? நான்கு வருஷம் ......"

"எதற்கும் ஒரு எல்லையுண்டு. இந்த வெட்கம் கெட்ட வீண் பேச்செல்லாம் எதற்கு? போதும், வாயை மூடுங்கள்!"

"நான் என்ன, அவ்வளவு வெட்கம் கெட்டவனா? நீ சொல்லுவதைப் பார்த்தால் நான் மிகவும் மட்டமானவன் என்றல்லவா தோன்றுகிறது? நான் இரவில் வீட்டுக்கு வராமல் எங்கேயாவது வெளியே சுற்றித் திரிகிறேனா! குதிரைப் பந்தயத்துக்குப் போகிறேனா? குடிக்கிறேனா? அல்லது சூதாட்டம்தான் ஆடுகிறேனா? என்னிடம் நீ எந்த வெட்கம் கெட்ட தனத்தைக் கண்டு விட்டாய்?"

"மாசம் பத்து ரூபாய் பருத்தறிவுப் போட்டிக்குத் தண்டம் அழுகிறீர்களே, அது சூதாட்டம் இல்லாமல் என்னவாம்?"

"படிக்கத் தெரியாத உனக்குப் பருத்தறிவைப் பற்றி என்ன தெரியும்?"

ஆமாம், நான் படிக்கத் தெரியாதவள் தான்; பட்டிக்காடுதான். இல்லையென்று யார் சொன்னார்கள்? ஆசையாயிருந்தால் யாராவது பி. ஏ., எம். ஏ. படித்த பெண்ணாகப் பார்த்துக் கல்யாணம் செய்துகொள்ளுங்களேன். யாரும் இங்கே வேண்டாம் என்று கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்தக் காத்திருக்கவில்லை. இன்னொருத்தி வந்து இந்த வீட்டில் குப்பை கொட்டுவதையும் இந்த நூறு ரூபாயைக் கொண்டு குடித்தனம் நடத்திக் கிழிக்கும் அழகையும் பார்த்து விடுகிறேன்!"

"இந்த நூறு ரூபாய்க்குக் கூட வழியில்லாமல் இந்த உலகத்தில் எத்தனையோ பேர் திண்டாட வில்லையா?"

"இல்லையென்று யாரும் சொல்லவில்லை. ஆனால் அவர்கள் உங்களைப்போல ஒரு நாளைக்கு ஒன்பது தடவை காப்பி குடிப்பதும் இல்லை. தினம் தினம் சினிமாவுக்குப் போவதும் இல்லை."

"என்ன, என்ன? நான் தினம் தினம் சினிமாவுக்குப் போகிறேனா? என்மேல் எதற்கு இப்படி அபாண்டமாக இல்லாத பழியையெல்லாம் சுமத்துகிறாய்? மாதம்



ஒரு தடவைக்கு மேல் நான் எப்பொழுது சினிமாவுக்குப் போயிருக்கிறேன்? விரலை மடக்கு, பார்ப்போம்!"

"ஏன்? போன வாரம்கூட நீங்கள் இரண்டு தடவை போகவில்லையா?"

"...ஆனால் இரண்டாம் தடவை போனது இனமாக 'ஓசி' டிக்கெட்டில் அல்லவா போனேன்!"

"சரி, அப்படியேதான் இருந்தாலும் பஸ் சார்ஜ், டிபன், வெற்றிலை, பாக்கு, புகையிலை—இதெல்லாம் கூடவா 'ஓசி'யாகக் கிடைத்து விட்டது?"

"சரி, இந்த வீண் பேச்செல்லாம் எதற்கு? நீ என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய், சொல்லு! பகல் முழுவதும் ஆபீஸில் செக்கு மாடாட்டமாக உழைத்து விட்டு, ஆபீஸ் சூபரிண்டென்டின் திட்டு வசவுகளை வாங்கிக் கட்டிக் கொண்டு, மானேஜரின் அதட்டல் உருட்டல்களையும் மூட்டை கட்டிக் கொண்டு, வீட்டுக்கும் வந்து உன்னோடு குஸ்தி போட வேண்டும் என்பதுதான் உன் ஆசையா? மனிதன் ஒரு நாள் 'ஹாயா'க மன நிம்மதியோடு இருந்தால் உனக்குப் பிடிக்கவே பிடிக்காதா?"

"உங்களை மன நிம்மதியோடு 'ஹாயா'க இருக்க வேண்டாம் என்று யார் தடுத்தார்கள்? உங்கள் இஷ்டம் போல் சந்தோஷமாக இருங்களேன்! ஆனால் அதற்கு முன்னாடி ஒரு காரியம். நீங்கள் செய்தால் நன்றாயிருக்கும். அதாவது என்னையும் என் குழந்தைகளையும் விஷத்தைக் கொடுத்து......"



"சிவசிவா! பித்துக்குளி போலப் பேசாதே! உன்னோடு மட்டும் வைத்துக் கொள்ளாமல் குழந்தை குட்டிகளையும் எதற்காக இப்படிச் சந்திக்கு இழுத்து விடுகிறாய்?"

"எதற்காக என்று கேட்கிறீர்களா? பள்ளிக்கூடத்தில் நம்ப சோமுவின் பெயரை அடித்து விட்டார்களாம்!"

"என்ன? அடித்து விட்டார்களா? ஏன்? எதற்காக? நாம் கட்டுவது சம்பளம் இல்லையாமோ?"

"சம்பளம் கட்டியிருந்தால் அவர்கள் எதற்காக அவனுடைய பெயரை அடித்திருக்கப் போகிறார்கள்?"

"அடாடா! இந்த மாசம் நான் சம்பளப் பணம் கட்ட மறந்து விட்டேன்போலிருக்கிறது. ஆனால் வர வர இந்தப் பள்ளிக்கூடங்களில் சம்பளப் பணம்தான் எவ்வளவு ஏறிப் போச்சு! என்ன இருந்தாலும் இவ்வளவு அதிகமாக......"

"அதிருக்கட்டும்; சம்பளம் கட்டுவதற்கு வைத்திருந்த பணத்தைப் பகுத்தறிவுப் போட்டி விழுங்கி விட்டது என்பதைச் சொல்லாமல் ஏன் இப்படி மறைக்கப் பார்க்கிறீர்கள்?"

"ஆனால், இந்தத் தடவைப் போட்டிக்கு ஐம்பதினாயிரம் ரூபாய் அல்லவா பரிசுத் தொகை வைத்திருக்கிறார்கள்! இம்மாதிரி அரிய சந்தர்ப்பத்தை எந்தப் பைத்தியக்காரனாவது நழுவ விடுவானா?"

"அந்த ஐம்பதினாயிரம் ரூபாய்ப் பரிசு அப்படியே கலையாக உங்களுக்கே கிடைத்துவிட்டதாக்கும்! இந்தப் பகுத்தறிவுப் போட்டிக்குத்தான் முப்பது வருஷமாகப் போட்டுக் கொண்டிருக்கிறீர்களே! எப்பொழுதாவது ஒரு செல்லாக் காசாவது உங்களுக்குக் கிடைத்ததா, சொல்லுங்கள்! எனக்கு இந்தப் போட்டிகள் எல்லாமே ஒரு சூழ்ச்சியோ என்று படுகிறது! யாராவது இதில் போய் அநாவசியமாக மனைச் செலுத்துவார்களா?"

"ஏன்? போன வருஷம் எனக்கு நான்கு தப்புகளுக்காக ஒரு வெள்ளிப் பென்சில் கிடைத்ததே, நினைவில்லையா?"

"வெள்ளிப் பென்சிலா அது?"

"வெள்ளிப் பென்சிலாக இல்லாவிட்டால் என்ன? பார்ப்பதற்குப் பளபள வென்று நல்ல வெள்ளியைப் போலக் கண்களைப் பறித்துக் கொண்டு மின்னவில்லையா?"

"இருந்தது! யார் இல்லை என்கிறார்கள்? ஆனால் பதினைந்தே நாளில் அது பல்லை இளித்து, நான் பித்தளைதான் என்பதை எடுத்துக் காட்டிவிட்டதே!"

"நல்ல சாமான்களை உபயோகப்படுத்தத் தெரியவில்லையென்றால், அதற்காக அவற்றைக் குறை கூறினால் ஆயிற்றா? குஞ்சு அதை எடுத்து வைத்துக்கொண்டு மேஜை மேல் கொட்டு மேளம் கொட்டினான். சோனி சுவரில் சித்திரம் எழுதுகிறேன் என்று சொல்லிக் கிறுக்கித் தள்ளினான். போதாக் குறைக்கு நீ 'ஸ்வெட்டர்' போடும் கம்பியாக அதை உபயோகித்தாய். இவ்வளவுக்கும் அப்புறம் அது வீணாகாமல் எப்படி இருக்கும்?"

"ஸ்வெட்டர் போடும் கம்பி வாங்கி வாருங்கள், வாங்கி வாருங்கள் என்று லக்ஷம் தடவைக்கு மேல் உங்களிடம் சொல்லியிருப்பேன். ஆனால் நீங்கள் காதில் வாங்கிக் கொண்டால்தானே? நான் வேறு எதை வைத்துக்கொண்டு 'ஸ்வெட்டர்' போடுவதாம்? என் தலையினால் போட முடியுமா, அதற்கு?"

"சரி, சரி! நாளைக்குக் கட்டாயம் நினைவாக ஒரு கம்பி வாங்கி வந்து உனக்குத் தந்துவிடுகிறேன்"

"நீங்களும் தான் இந்த மாதிரி எத்தனையோ தடவை சொல்லி விட்டீர்கள்? ஆனால் உங்களுக்கு நான் சொல்லுவது எங்கே நினைவு வரப்போகிறது?"

"ஏன்? வேறு எதாவது நீ சொல்லி நான் மறந்திருக்கிறேனா? முந்தா நாள் காப்பிப் பொடியில்லை என்று சொன்னாயே, உடனே நான் வாங்கி வந்து தந்துவிடவில்லையா?"

"எனக்காகவா வாங்கி வந்தீர்கள்? நான் என்றைக்காவது இந்தக் காப்பியைக் கையால் தொட்டிருக்கிறேனா? உங்களுக்கு மூடை; அதனால் வாங்கி வந்தீர்கள்!"

"சரி, அது போனால் போகிறது! முதல் காரியமாக ஒரு கப் காப்பி போட்டுக் கொடேன்!"

"காப்பி போட்டுக் கொடுப்பது இருக்கட்டும். முதலில் அதற்குச் சர்க்கரை வேண்டாமா? வீட்டில் ஒரு பொட்டுச் சர்க்கரை கூடக் கிடையாது. சர்க்கரைக்கு எங்கே போவது?"

"என்ன? வீட்டில் சர்க்கரை இல்லையா?"

"ஆமாம், ஆமாம்! எத்தனை தடவை தான் இந்த இல்லைப் பாட்டைப் பாட வேண்டும் என்கிறீர்கள்? வரவர உங்களுக்குக் காது செவிடாகி விட்டதா, என்ன!"

"ஏன், தங்கம்! இப்பொழுது தானே நாலாம் நாள் ரேஷன் வாங்கி வந்தேன்!"

"ஆமாம். ஆனால் எத்தனை சர்க்கரை வாங்கி வந்தீர்கள், தெரியுமா? பத்தே பத்துப் பலம் தான். நம் வீட்டுக்குக் கிடைக்கும் ரேஷன் அவ்வளவுதான் என்பதாவது உங்களுக்குத் தெரியுமோ, தெரியாதோ? அந்தச் சர்க்கரை எத்தனை நாளைக்கு வரும் என்று எண்ணுகிறீர்கள்!"

"என்ன இருந்தாலும் நான் இரண்டே இரண்டு ஸ்பூன் சர்க்கரைதானே போட்டுக் கொள்ளுகிறேன்!"

"நீங்கள் இரண்டு ஸ்பூன்தான் போட்டுக் கொள்ளுகிறீர்கள். பொழுது விடிந்தால், பொழுது போனால் உங்களுடன் வரும் நண்பர்கள் இருக்கிறார்களே, அவர்கள் நாலு நாலு ஸ்பூன் சர்க்கரை அல்லவா போட்டுக் கொள்ளுகிறார்கள்!"

"நானும் தான் அவர்கள் வீட்டுக்குப் போய்க் காப்பி சாப்பிடுகிறேனே!"

"அப்படியானால் இன்றைக்கும் தான் அவர்களுடைய வீட்டுக்குப் போய்க் காப்பி குடித்து விட்டு வாருங்களேன்!"

"சரி, அப்படியெல்லாம் கோபித்துக் கொள்ளாதே! எனக்கு வெல்லம் போட்ட காப்பியே கொடுத்தாலும் போதும்!"

"அது சரி! ஆனால் பாலுக்கு என்ன செய்வீர்களாம்?"

என்? இன்றைக்கு வீட்டில் பால் கொஞ்சம் கூட இல்லையா, என்ன?"



“நம் வீட்டில் தொள்ளாயிரம் படி பால் வாங்கி விடுகிறோமே, இல்லாமல் இருக்குமா? ...... வாங்குவதோ மூன்று ஆழாக்குப் பால். எங்கிருந்து இருக்கும்? குழந்தைகளுக்கு வேளைக்குக் கால் ஆழாக்குக் கூடச் சரியாகக் கொடுக்க முடிகிறதில்லை. அதுவும் பாலில் பாதிக்கு மேலாகத் தண்ணீர். அந்தப் பாலைத்தான் மோருக்கும் வேறு வைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது ...... நீங்களும் தான் குழந்தைகளைப் பார்த்துக் கொண்டு வருகிறீர்களே! குழந்தைகள் எலும்பு ஒட்டித் தோல் ஒட்டிப் போய்க் கிடப்பது தெரியவில்லையா? காப்பிக்கு என்று வைத்திருக்கும் அரை ஆழாக்குப் பாலை உங்கள் சிநேகிதர்களுக்குக் காப்பி போட்டுக் கொடுப்பதா அல்லது உங்கள் சாயந்திரக் காப்பிக்காக வைத்திருப்பதா? நீங்கள் எப்படிச் சொல்லுகிறீர்களோ, அப்படிச் செய்கிறேன்!”

“சரி, விடு! இனிமேல் ஒரு பால் புட்டி வாங்கி வந்து வைத்து விடுகிறேன்!”

“தாராளமாக வாங்கி வந்து வையுங்கள். யார் வேண்டாம் என்றார்கள்? ஆனால் என்னிடம் மட்டும் பணத்துக்கு வாராதீர்கள்!”

“என்னிடமும்தான் பணம் ஏது? என்னிடம் இருப்பது மூன்றே அணாதான்!”

“காலம்பற உங்கள் பையிலே ஒண்ணரை ரூபாய் இருந்ததைப் பார்த்தேனே!”

“நான்கணா பஸ் சார்ஜுக்குப் போய் விட்டது. ஒரு அணாவுக்கு வெற்றிலைப் பாக்கு வாங்கிக் கொண்டு விட்டேன்...”

“சரி; அந்த ஒரு ரூபாய் நோட்டு என்ன ஆயிற்று என்று கேட்கிறேன்! யாராவது ஆசை நாயகி—ஓசை நாயகிக்குக் கொடுத்து விட்டு வந்திருப்பீர்கள். அப்படித்தானே?”

“யூனியனுக்குச் சந்தாப் பணம் கட்டி விட்டு வந்தேன்!”

“யூனியன்! யூனியன்! எப்பொழுது பார்த்தாலும் யூனியன்! இந்த யூனியனைக் கட்டிக் கொண்டு இப்படி எதற்காகத் தான் மாரடிக்கிறீர்களோ, தெரியவில்லை! இந்த உதவாக்கரை யூனியன் எனக்குச் சக்களத்தி போல எங்கிருந்து தான் வந்து முளைத்ததோ? எப்பொழுது பார்த்தாலும் ‘பணம் பணம்!’ என்று கேட்டுப் பிச்சுப் பிடுங்கித் தின்கிறது—ஆமாம், நீங்கள் ஏதாவது தொழிற்சாலையில் கூலி வேலை செய்து பிழைக்கிறீர்களா? எதற்காக உங்கள் ஆபீஸிலும் இந்த இழவெடுத்த யூனியனும்!

“உனக்கோ ஒன்றும் தெரியவில்லை. இந்த யூனியன் தான் எங்களுக்கு...”

“ஆமாம், ஆமாம்! இந்த யூனியன் தான் உங்களுக்கு மனைவி, குழந்தை, குட்டி, தாய் எல்லாம். அப்படியானால் அதனிடமே போய் உங்களுக்குச் சோறு போடச் சொல்லுவதுதானே? எதற்காக இங்கே வந்து எங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளுகிறீர்கள்? வீட்டு அடுப்பில் பூனை தூங்கினாலும், பள்ளிக்கூடத்தில் குழந்தைகளின் பெயரை அடித்து விட்டாலும் கூட உங்களுக்கு ஒரு அக்கறையும் இல்லை. இரவு பகல் இருபத்து நாலு மணி நேரமும் இந்த இழவெடுத்த யூனியனைக் கட்டிக் கொண்டு அழுவதும் அதற்குச் சந்தாக் கொடுப்பதும் தான் உங்களுக்கு வேலை. கட்டின பெண்டாட்டி, இழவெடுத்த யூனியன் இந்த இரண்டுக்குள் எது பிடித்ததோ, அதைப் பார்த்துக் கொள்ளுங்கள். இரண்டும் கெட்டானாக இராதீர்கள் என்று எத்தனையோ ஆயிரம் ஆயிரம் தடவை உங்களிடம் நான் படித்துப் படித்துச் சொல்லிவிட்டேன். ஆனால் நீங்கள் காதில் போட்டுக் கொள்ளுகிற வழியாயில்லை. உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். எனக்கு விஷத்தைக் கொடுத்து விடுங்கள். அப்புறம் வாங்குகிற சம்பளம் அத்தனையும் அந்த யூனியனுக்கே கொடுத்துக் கொள்ளுங்கள். எதற்காக என்னைக் கஷ்டத்துக் குள்ளாக்கி என் பொறுமையைச் சோதிக்கிறீர்கள்?”

“அழாதே, தங்கம்! இனிமேல் சம்பளமே கிடைக்காது. கம்பெனியில் நாற்பது குமாஸ்தாக்களுக்கு வேலையில்லை என்று நோட்டீஸ் கொடுத்து விட்டார்கள்!”

“என்ன? உங்களுக்குக் கூடவா?”

“ஆமாம்!”

“முதலில் என்னவோ சொல்ல வந்தீர்களே, இதைப் பற்றித்தானோ?”

“ஆமாம்!”

“அப்படியானால் நாளைக்கு என்ன செய்வது?”

“செய்வதற்கு என்ன இருக்கிறது? எப்பொழுதும் போல உள்ள கர்தாயம்தான். கூலிகளுக்கும் முதலாளிகளுக்கும் தகராறு. எங்களை வேலையை விட்டு நீக்குவது சட்ட விரோதமானது. ஆகவே யூனியன் ஸ்டிரைக் செய்யப் போவதாக நோட்டீஸ் கொடுத்திருக்கிறது!”

“ஸ்டிரைக்கா?”

“ஆமாம், குமாஸ்தாக்கள் காவற்காரர்கள் எல்லோருமே ஸ்டிரைக் செய்யத் தயாரா

விருக்கிறார்கள். அதற்காக ஸ்டிரைக் நிதி கூடச் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள்!"

"நீங்கள் எத்தனை கொடுக்க வேண்டும்?"

"ஐந்து ரூபாய்!"

*　　　*　　　*

அதற்குப் பின் மூன்று மணி நேரம் ஓடிவிட்டது.

"இந்தாருங்கோன்னு! உங்களைத்தானே? தூங்கிவிட்டீர்களா?"

"இல்லையே! தூக்கம் வந்தால்தானே தூங்க?"

"என்ன யோசனை செய்து கொண்டிருக்கிறீர்கள்?"

"இந்த உலகம் எப்பொழுதுதான் மாறுமோ என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். அதுமட்டும் அல்ல; காலைக்கு ஐந்து ரூபாய் வேண்டுமே! அதற்கு என்ன வழி செய்வது? எங்கிருந்து ரூபாய் வரும் என்ற கவலையும் வேறு வாட்டிக் கொண்டிருக்கிறது!"

"ஐந்து ரூபாய்தானே?—இந்தாருங்கள்!"

"உன்னிடம் ஏது இந்த ஐந்து ரூபாய்?"

"மழைக்காலம் வந்தால் உங்களுக்கு ஒரு குடை வாங்க வேண்டுமே என்பதற்காக மிச்சப்படுத்தி வைத்திருந்தேன்."

"அப்படியானால் இந்த ஐந்து ரூபாயை தூனியனுக்குக் கொடுக்கிறேன் என்கிறாயே! 'சக்களத்தி, சக்களத்தி!' என்று கரித்துக் கொட்டிக் கொண்டிருந்த அந்த தூனியனுக்கு இந்தப் பணத்தைக் கொடுக்க உனக்குச் சம்மதந்தானா?"

"இப்பொழுது எழுந்திருக்கும் இந்தப் புயலிலும் மழையிலும் இந்த 'தூனியன்' தான் நமக்குக் குடையாக உதவுமோ என்று எண்ணுகிறேன்!"

"..................."

"அடாடா! ஆண் பிள்ளையாக இருந்து கொண்டு இப்படி அழுகிறீர்களே! ஏன்?"

"இல்லையே! நான் அழவில்லையே! என் கண்களிலிருந்து பெருகுவது ஆனந்தக் கண்ணீர் அல்லவா?"

"ஆனந்தக் கண்ணீரா?"

"ஆமாம்! தங்கம், நீ எவ்வளவு நல்லவள்!"

"..................."

"தங்கம்! தங்கம்!"

"ஏன்? என்ன?"

"ஒன்றுமில்லை. வந்து......தங்கம்!...... தங்கம்!"

"நகருங்கோன்னு! உங்களுக்குக் கொஞ்சமாவது வெட்கமாயில்லை?"

[ஸ்ரீ கே.ஏ. அப்பாவின் கதையைத் தழுவியது]

## பூச்சாண்டி!














பொங்கல் நெருங்கிக் கொண்டிருந்தது. கிரகஸ்தர் ஒருவர் தம் வீட்டு வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். அப்பொழுது, "வேலை ரொம்ப அதிகமோ?" என்று நரித்தனத்துடன் கேட்டுக் கொண்டே அவருடைய நண்பர் ஒருவர் அவரைப் பார்க்க வந்தார்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை; நீங்கள் சும்மா வாருங்கள்!" என்று கிரகஸ்தர் உலக வழக்கத்தை யொட்டி அவரை வரவேற்கவில்லை. அதற்குப் பதிலாக, "ஆமாம், வேலை ரொம்ப அதிகமாய்த்தான் இருக்கிறது. பழைய சாமான்களை யெல்லாம் ஒழித்துக் கொண்டிருக்கிறேன்" என்றார்!

வந்தவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, "பழைய சாமான்கள் என்றால் உங்களுக்குப் பிடிக்காத சாமான்களையா?" என்று மேலும் பேச்சைத் தொடர்ந்தார்.

"ஆமாம்" என்றார் கிரகஸ்தர்.

"ஒரு காலத்தில் அவையெல்லாம் உங்களுக்குப் பிடித்த சாமான்களாகவே இருந்திருக்கும். இப்பொழுது........" என்று நண்பர் மேலும் ஏதோ தொடர்ந்து சொல்ல ஆரம்பிக்கவே, கிரகஸ்தர் குறுக்கிட்டு, "ஆமாம், இப்பொழுது பிடிக்காமற் போய்விட்டன. அதனால்தான் அவற்றை எடுத்துக் குப்பையில் வீசி எறிந்து கொண்டிருக்கிறேன்!" என்றார் வேலைத் தொந்தரவினால்.

இப்பொழுதுதான் வந்தவருக்கு விஷயம் புரிந்தது. "சரி, வேலை ரொம்ப அதிகம் போலிருக்கிறது; சாயந்திரம் வந்து சாவகாசமாகப் பேசிக் கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு நழுவினார். கிரகஸ்தர், "அவசியம் வாருங்கள்!" என்று அவருக்கு விடை கொடுத்து அனுப்பினார்.

சொன்னது சொன்னபடி அன்று மாலை வந்த நண்பரை, "வாருங்கோ, வாருங்கோ!" என்று முகமலர்ச்சியுடன் வரவேற்று உபசரித்தார் கிரகஸ்தர்.

"வேலை முடிந்துவிட்டது போலிருக்கிறது; வேண்டாத சாமான்களை யெல்லாம் எடுத்து வெளியே எறிந்து விட்டீர்கள் போலிருக்கிறது!" என்று கூறிக் கொண்டே நாற்காலியில் அமர்ந்தார் நண்பர்.

"ஆமாம்; இன்னும் ஒரே ஒரு சாமான்தான் பாக்கி இருக்கிறது. ஆனால் அதை எடுத்து வெளியே எறிய முடியவில்லை!" என்றார் கிரகஸ்தர் வருத்தத்துடன்.

"அது என்ன, அப்படிப்பட்ட சாமான்?" என்று நண்பர் அவரை நெருங்கி ஆவலுடன் கேட்டார்.

"வேறு என்ன?— எழுபது வருஷங்களாக நான் சுமந்து கொண்டிருக்கும் இந்த உடம்புதான்!" என்றார் கிரகஸ்தர். -கிந்நன்.



# இப்படியும் ஒரு மனிதர்!

வசு

அன்று ஜூன் மாதம் இரண்டாவது சனிக்கிழமை. வழக்கம் போல் ஆபீஸ் இரண்டு மணிக்கே முடிவடைந்து விட்டது. சைக்கிளில் ஏறி, சரியாக இரண்டே கால் மணிக்கு வீட்டை அடைந்தேன். வாசலில் நின்று கொண்டிருந்த என்னுடைய நான்கு வயதுப் பெண் ராஜி, நான் வந்ததும் வராததுமாக என் கால்களை வந்து கட்டிக் கொண்டு, "அப்பா, அப்பா! எனக்குப் பரீட்சை பாஸாயிடுத்துன்னு எங்க டீச்சர் சொன்னா" என்றாள் முகத்தில் சந்தோஷம் பொங்க. "சரி, ரொம்ப கெட்டிக்காரி நீ" என்று சொல்லி அவள் முதுகில் ஒரு தரம் செல்லமாகத் தட்டிக் கொடுத்தேன்.

அப்பொழுதுதான் எனக்கு ஞாபகம் வந்தது. அன்றைக்குத்தான் கோடை விடுமுறை கழிந்து என்னுடைய பையன் ரமணி படித்துக் கொண்டிருக்கும் பள்ளிக்கூடம் திறக்கும் நாளென்று. முதலாவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்த ரமணி மேல் வகுப்புக்கு மாற்றப்பட்ட விவரமும் அன்று தான் தெரிவித்திருப்பார்கள் பள்ளி அதிகாரிகள். உடனே ராஜியிடம் "ரமணி எங்கே?" என்றேன்.

"அவன் வந்து அப்பா..." என்று தயங்கினாள் ராஜி.

"அவனுக்கு என்ன?" என்றேன் மறுபடியும்.

"பாவம், அப்பா! அவன் காமரா உள்ளிலே உட்கார்ந்து அழுதுகொண்டு இருக்கிறான்" என்றாள் ராஜி. அவளுடைய பதிலிலிருந்து ரமணியை மேல் வகுப்புக்கு மாற்றவில்லை என்ற விஷயத்தை ஒருவாறு புரிந்து கொண்டேன். அவ்வளவுதான்; என்னையுமறியாமல் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. முன்கூடத்திலிருந்தபடியே "ரமணீ! ரமணீ!" என்று இரண்டுதரம் கூப்பிட்டேன்.

நான் கொடுத்த குரலுக்குப் பதிலாக ரமணி வரவில்லை. அதற்குப் பதிலாக என் மனைவிதான் என் முன் பிரசன்னமானாள். "ரமணி எங்கே? அந்த மட்டியை இங்கே இழுத்துக் கொண்டு வா!" என்று இரைந்தேன். எனக்கு இருந்த ஆத்திரத்தில் அவன் முதுகில் 'பளார், பளார்' என்று நாலைந்து அறை கொடுத்தால்தான் மனதுக்குச் சமாதானம் ஏற்படும்போலிருந்தது.

"பரீட்சை பாஸாகவில்லைன்னு காலமே முதல் சாப்பிடக்கூட வராமல் அழுது கொண்டிருக்கான். இந்தச் சமயத்திலே நீங்கள் வேறே அவனை அடித்து ஹிம்சிக்க வேண்டாம். உங்களுக்குக் கோடிப் புண்ணியம்" என்று பையனுக்காகப் பரிந்து கொண்டு வந்தாள்.

"நீ செல்லம் கொடுத்துப் பாழாக்கினதுக்கு அப்புறம் அவன் உருப்படுகிறதேது? அவன் எக்கேடாவது கெட்டுத் தொலையட்டும்" என்று அலுத்துக்கொண்டு மறுபடியும் சைக்கிளில் ஏறி, கோபம் தணியும்பொருட்டு வெளியே கிளம்பத் தயாரானேன்.

"நான் ஏதோ சொல்லவேணும்னு வந்தேன். அதற்குள் நீங்கள் ஓரேயடியா கோபித்துக் கொண்டு......" என்று ஆரம்பித்தாள் என் மனைவி.

"சரி, சீக்கிரம் சொல்லித் தொலை" என்றேன் வெறுப்புடன்.

"பின் கட்டில் குடியிருக்கிறாரே பிச்சுமணி அய்யர், அவருடைய பையனும் ரமணியின் கிளாஸிலேதான் படிக்கிறானாம். அவன் கூடப் பரீட்சையில் தவறிவிட்டானாம்..." என்றாள்.

"நீ எனக்குச் சமாதானம் சொல்ல வருகிறாயா? அந்தப் பையன் பரீட்சை தவறிப் போனதினாலே நமக்கு என்ன விதத்தில் லாபம்?" என்றேன்.

"ஐயோ! நான் சொல்லுவதைப் பூராவும் கேட்டுக் கொண்டு பதில் சொல்லுங்களேன்......"

"சரி, சரி; சட்டுப்புட்டுன்னு சொல்லு. நான் வெளியே கிளம்பியாச்சு!" என்றேன்.

"நம்ம ரமணியை விட அவர் பையன் ஒவ்வொரு பாடத்திலேயும் இரண்டொரு மார்க்கு குறைவாகத்தான் வாங்கியிருக்கானாம். அவர் நேரில் ஹெட்மாஸ்டரைக் கண்டு பேசிப் பண்ணி அவர் பையனை மேல் கிளாஸுக்கு மாற்ற முடியுமான்னு பார்க்க இப்போதான் சைக்கிளில் ஸ்கூலுக்குப் போயிருக்கார். நீங்களும் போய் ஹெட்மாஸ்டரைப் பார்த்து நம்ம ரமணி 'பிரமோஷ'னுக்கு ஏதாவது வழியுண்டான்னு பாருங்களேன்" என்றாள்.

ஒரு கணம் யோசித்து விட்டு "சரி, போய்ப் பார்க்கிறேன். ரமணி பள்ளிக்



கூடத்திலிருந்து கொண்டுவந்த மார்க் லிஸ்டைக் கொண்டு வா!" என்றேன். அவன் மார்க் லிஸ்டைக் கொண்டு வந்தான். அதைப் பார்த்ததும் எனக்குப் 'பகீர்' என்றது. அநேகமாக ஒரு பாடத்தில் கூட நூற்றுக்கு இருபது மார்க்கு அதிகமாகாதபடி அவ்வளவு செட்டாக மார்க்கு வாங்கியிருந்தான் என்னுடைய புத்திர சிகாமணி ரமணி. அதைப் பார்த்ததும், ஹெட்மாஸ்டர் என்னுடைய பேச்சுக்குச் செவி சாய்த்து அவனுடைய ரிஸல்ட்டை மாற்றிக் கொடுப்பார் என்று எனக்கிருந்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையும் தளர ஆரம்பித்தது. ஹெட் மாஸ்டரைப் போய்ப் பார்த்துவிட்டு வருவதாக என் மனைவிக்கு வாக்குக் கொடுத்த பின் அதை நிறைவேற்றுவதற்காக சைக்கிளில் ஏறி, பள்ளிக் கூடத்தை நோக்கிப் புறப்பட்டேன்.

ஹெட் மாஸ்டர் அறைக்கு முன் வரிசையாகப் போடப்பட்டிருந்த பெஞ்சுகளில் ஒன்றில் பிச்சுமணி அய்யர் உட்கார்ந்திருந்தார். அவர் பக்கத்தில் போய் அமர்ந்து நான் வந்திருந்த காரியத்தைத் தெரிவித்ததும் அவர் கொஞ்சம் தைரியமடைந்தவர் போல் காணப்பட்டார். அவர் கையிலிருந்த அவருடைய பையனின் மார்க் லிஸ்டைப் பார்த்ததும் என்னுடைய பையன் அவனைவிடப் படிப்பில் எவ்வளவோ மேல் என்ற தீர்மானத்திற்கு வந்தேன். அவ்வளவு மோசமாக மார்க்கு வாங்கியிருந்தான் அவருடைய அருமந்த புத்திரன்.

கொஞ்ச நேரத்திற்கெல்லாம் ஹெட் மாஸ்டர் அவரைப் பார்க்க வந்திருப்பவர்களை ஒவ்வொருவராக அவருடைய அறைக்குள் அனுமதிக்கும்படி சேவகனுக்கு உத்தரவிட்டார். அங்கு கூடியிருந்தவர்கள் ஒவ்வொருவராக அவரைப் பேட்டி கண்டு விட்டு வந்தார்கள். பிச்சுமணி அய்யருடைய முறையும் வந்தது. அவர் உள்ளே போய் வெளியே வந்ததும் அவர் முகம் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவர் சொல்லாமலேயே அவர் போன காரியம் பூஜ்யம்தான் என்று அறிந்து கொண்டேன். அவரை அங்கேயே இருக்கும்படி சொல்லி விட்டு ஹெட்மாஸ்டரிடம் போய் என் பையன் ரமணியை மேல் வகுப்புக்கு மாற்றும்படி என்னுடைய திறமையை எல்லாம் உபயோகித்து வாதாடினேன். அப்படியிருந்தும் ஹெட்மாஸ்டர் ஒன்றுக்கும் மசியவில்லை. என்னுடைய பையன் வாங்கியிருக்கும் மார்க்கை வைத்துக் கொண்டு அவனை மேல் வகுப்புக்கு அனுப்புவதென்பது அவர் ஒரு வேளை பைத்தியம் பிடித்திருக்கும்போது செய்யத் தகுந்த காரியமே தவிர, சுயபுத்தியுடன் இருக்கும் போது சொப்பனத்தில் கூடச் செய்ய முடியாத காரியம் என்று ஐயந்திரிபுக்கு இடமின்றி எடுத்துரைத்தார் கடைசியாக. ரமணியின் கல்வியில் எனக்கு எவ்வளவு சிரத்தை இருந்த போதிலும் அவனுடைய 'ப்ரமோஷ'னுக்கு ஏதுவாக இருக்கும்பொருட்டு ஹெட்மாஸ்டருடைய சித்த சுவாதீனத்திற்குக் கேடு வர விரும்பவில்லை யாதலால் என்னுடைய பேச்சை முடித்துக் கொண்டு வெளியேறினேன். நான் அந்த அறையை விட்டு வெளியே வந்த பொழுது என்னைத் தாண்டிக் கொண்டு டீக்காக உடை அணிந்திருந்த ஒரு பெரிய மனிதர் ஹெட்மாஸ்டர் அறைக்குள் நுழைந்தார்.

நான் வெளியே வந்ததும் சுற்றுமுற்றும் பார்த்தேன். பிச்சுமணி அய்யர் இருக்க வேண்டிய இடத்தில் அவரைக் காணவில்லை. அவரைத் தேடிக் கொண்டு பள்ளிக் கூடத்து வெளித் தாழ்வாரத்துக்கு வந்தேன். அங்கேயிருந்து உள்ளே திரும்பிக் கொண்டிருந்த பிச்சுமணி அய்யர் என்னிடம் வந்து "ஹெட்மாஸ்டர் அறைக்குள் நுழைந்தவர் யார் என்று தெரியுமா, உங்களுக்கு?" என்றார்.

"அவர் யாராயிருந்தால் நமக்கென்ன, ஸார்? வீட்டுக்குக் கிளம்புவோம், வாருங்கள்!

நாம் வந்த காரியம் பலிதமாகவில்லை" என்றேன் அசிரத்தையாக.

"அதற்கில்லை ஸார்! அதில் ஒரு விசேஷம் இருக்கிறது. அவர் பெயர் கோபால கிருஷ்ண சர்மாவாம். அவர் சர்க்காரில் ஒரு பெரிய உத்தியோகஸ்தராம். அவர் பையனும் இங்கேதான் படிக்கிறானும். ஒரு வேளை அவருடைய பையனும் பரீட்சையில் 'கோட்' போலிருக்கிறது. அதற்காக ஹெட்மாஸ்டரைக் கண்டு சிபார்சு பண்ணி அவனை மேல் வகுப்புக்கு அனுப்ப ஏற்பாடு செய்ய வந்திருக்கிறார் போல் தோன்றுகிறது. அவர் கையில் ஒரு மார்க் லிஸ்ட் வைத்திருந்தார். அது அவருடைய பையனுடையதுதான் என்பதில் சந்தேகமேயில்லை. அவருடைய பையனுக்கு ஹெட்மாஸ்டர் பிரமோஷன் கொடுத்தால் நாம் அதை எடுத்துக் காட்டி நம்முடைய பையன்களுக்கும் அந்தச் சலுகையைக் காட்டச் சொல்லலாமல்லவா?" என்றார் பிச்சு மணி அய்யர்.

பிச்சு மணி அய்யர் சொன்ன யோசனை சரி என்று பட்டது எனக்கு. அவரிடம் "ஆமாம், இந்தத் தகவல்களை எல்லாம் உங்களுக்கு யார் சொன்னார்கள்?" என்றேன்.

அதற்குப் பிச்சுமணி அய்யர் "சர்மா காரில் தான் வந்தார். அவருடைய டிரைவரிடம் பேச்சுக் கொடுத்து இந்த விஷயங்களையெல்லாம் தெரிந்து கொண்டேன். இன்று அவர் ஆபீஸிலிருந்து வீட்டிற்கு வந்ததும் அவர் சம்சாரம் அவரிடம் அவர் பையனுடைய மார்க் லிஸ்டைக் கொடுத்தாளாம். அதை வாங்கிப் பார்த்துவிட்டு அவர் ஒரேயடியாகக் கூச்சல் போட்டாராம். அவர் மனைவி எவ்வளவோ சமாதானப் படுத்தியும் அவர் கோபம் தணியவில்லையாம். உடனே பட்டையைக்கூடக் கழற்றாமல் மறுபடியும் காரில் வந்து ஏறிக்கொண்டு காரை வேகமாக ஓட்டும்படி சொன்னாராம்" என்றார்.

"சரி, அப்படியானால் நாமும் உள்ளே போய் என்ன நடக்கிறது என்று பார்ப்போம்" என்று சொல்லி, பிச்சுமணி அய்யரையும் அழைத்துக் கொண்டு மறுபடியும் ஹெட் மாஸ்டர் அறைக்கு முன் போடப் பட்டிருந்த பெஞ்சுகளில் ஒன்றில் போய் அமர்ந்தோம். அங்கே அப்பொழுது எங்கள் இருவரைத் தவிர வேறு ஒருவருமில்லை. நாங்கள் அங்கே வருமுன் ஹெட் மாஸ்டரும் சர்மாவும் என்ன பேசிக்கொண்டார்கள் என்பதை எங்களால் அறிந்து கொள்ள முடியாவிட்டாலும் நாங்கள் அங்கே வந்த பிறகு அவர்கள் பேசிக் கொண்டது எங்கள் காதில் தெளிவாக விழுந்தது.

ஹெட் மாஸ்டர்:—ஒருதரம் 'ரிஸல்ட்' போட்ட பிறகு அதை மாற்ற முடியாது, ஸார்!

சர்மா:—அப்படியானால் நீங்கள் சொன்ன பதில் தீர்மானமானதுதானா? மறுபடியும் யோசித்துப் பார்க்க முடியாதா?

ஹெ:—ஆமாம், 'ரிஸல்ட்' போடுவதற்கு முன் என்னை வந்து பார்த்திருந்தீர்களானால் ஒரு வேளை ஏதாவது செய்திருக்க முடியும்.

சர்மா:—இன்றைக்குத்தானே ஸார், என்னுடைய பையனின் மார்க் லிஸ்ட் என்னிடம் வந்தது. அவன் வாங்கியிருக்கும் மார்க்குகள் தெரியாமல் நான் உங்களை வந்து பார்த்து என்ன உபயோகம்?

ஹெ:—நீங்கள் என்னிடம் மேலும் மேலும் பேசுவதில் பயனில்லை. இந்த விஷயத்தில் நான் இப்போது தலையிடவே முடியாது.

சர்மா:—அப்படியானால் நான் என் பையனை உங்கள் பள்ளிக்கூடத்திலிருந்து விலக்கி வேறு ஸ்கூலில்தான் சேர்க்க வேண்டும்போலிருக்கிறது.

ஹெ:—அது உங்கள் இஷ்டம், தாராளமாகச் செய்யுங்கள்.

இதைத் தொடர்ந்து சர்மா வெளியே வந்தார். அவர் முகத்தில் ஈயாடவில்லை. அவரைத் தொடர்ந்து நானும் பிச்சுமணி அய்யரும் பள்ளிக்கூடத்திற்கு வெளியே வந்தோம். சர்மாவின் கார் டிரைவர் காரின் ஒரு சக்கரத்திற்குக் காற்று அடைத்துக் கொண்டிருந்தான். அது முடியும் வரை சர்மா காரின் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார். அவர் கையில் வெளியில் தெரியும்படி வைத்துக் கொண்டிருந்த அவருடைய பையனின் மார்க் லிஸ்ட்டை ஜாடையாகக் கவனித்தேன். அநேகமாக ஒன்றிரண்டு பாடங்களைத் தவிர மற்றப் பாடங்களில் நூற்றுக்கு முப்பதுக்குக் குறையாமல் மார்க்குகள் வாங்கியிருந்தான். சமா



ராக மார்க்கு வாங்கியிருந்த அவனையே மேல் வகுப்புக்கு அனுப்பாதபோது என்னுடைய பையனையும் பிச்சமணி அய்யருடைய பையனையும் மேல் வகுப்புக்கு மாற்றாததைப் பற்றி நாங்கள் ஹெட்மாஸ்டர் பேரில் கோபப்பட முகாந்திரமில்லை என்று சமாதானமடைந்தேன். எதற்கும் என்னுடைய அனுதாபத்தை சர்மாவிடம் தெரிவித்துவிட வேண்டுமென்று மெதுவாக பேச்சை ஆரம்பித்தேன்.

சர்மாவைப் பார்த்து "என் ஸார், இந்த ஹெட் மாஸ்டர் ரொம்பக் கண்டிப்பானவர் போலத் தோன்றுகிறது" என்றேன்.

"ஆமாம், எதற்கெடுத்தாலும் சட்டம் பேசுகிறார்" என்றார் சர்மா.

"நானும் இதோ நிற்கிறாரே என் சினேகிதர்—இவரும் எங்கள் பையன்களுடைய ரிஸல்ட்டைப் பற்றி அவரைப் பேட்டி கண்டோம். கொஞ்சங்கூடப் பிடி கொடுக்காமல் நிர்த்தாட்சண்யமாகப் பதில் சொல்லிவிட்டார் ஸார், அவர்!" என்றேன்.

"அது அவர் கூடப்பிறந்த குணமாச்சே!" என்று ஒரு போடு போட்டார் சர்மா.

"ரொம்ப நன்றாகச் சொன்னீர்கள்! எங்கள் பையன்கள் எல்லாப் பாடத்திலேயும் நூற்றுக்கு இருபது, பதினைந்து இந்த மாதிரி மார்க்கு வாங்கியிருந்தார்களென்று பிரமோஷன் கொடுக்கவில்லை. அதாவது போகட்டும், பாதகமில்லை. உங்கள் பையன் அநேகமாக எல்லாப் பாடத்திலேயும் முப்பதுக்குக் குறையாமல் மார்க் வாங்கியிருக்கும்போது அவனையும் 'பெயிலா'க்குகிறது தான் ரொம்ப அநியாயம், ஸார்!" என்றேன் அனுதாபம் கலந்த குரலில்.

சர்மா என்னை ஒரு தரம் முறைத்துப் பார்த்துவிட்டு "என் பையன் 'பெயில்'னு யார் ஸார், உங்களுக்குச் சொன்னது? அதற்காக நான் ஹெட் மாஸ்டரிடம் சண்டை போடவில்லை ஸார்! இரண்டாவது பாரத்திலேயே நூற்றுக்கு இருபத்து எட்டும் முப்பதுமாக மார்க்கு வாங்கியிருக்கிற இந்த அசட்டுப் பையனை மேல் வகுப்புக்குப் பிரமோஷன் பண்ணியிருக்கிறார் அந்த ஹெட்மாஸ்டர்! இப்படி பொறுப்பில்லாமல் அவனை மேல் வகுப்புக்குத் தூக்கிப் போட்டால் அவன் எஸ். எஸ். எல். ஸி. வகுப்புக்குப் போவதற்குள் படிப்பில் சிரத்தை குறைந்து எஸ். எஸ். எல். ஸிக்கு எட்டுத் தடவை போனாலும் கூடப் பாஸாகமாட்டானே, ஸார்! அதில் யாருக்கு ஸார் கஷ்டம்? எனக்கா? ஹெட்மாஸ்டருக்கா? இந்தப் பயலுக்குப் புத்தி வரும்படி இரண்டாவது பாரத்திலேயே கூட ஒரு வருஷம் வைத்து விடுவதற்கென்ன என்று ஹெட்மாஸ்டரைக் கேட்டேன். அவர் முடியாது என்கிறார். அவர் பதில் சொல்லுகிற லட்சணத்தைப் பார்த்தீர்களா? இவர் பள்ளிக்கூடத்தில் என் பையன் படித்தால் உருப்படுவானா? நீங்களே சொல்லுங்கள்!" என்றார்.

சர்மா சொன்ன பதிலைக் கேட்டதும் நானும் பிச்சமணி அய்யரும் மூர்ச்சை போட்டு விழுந்து விடும் நிலைமைக்கு வந்து விட்டோம். ஆனால் அதை தடுத்து மூர்ச்சை தெளிவிக்க எங்கள் சகதர்மிணிகள் எங்கள் பக்கத்தில் இல்லாததை உணர்ந்து ஒரு விதமாகச் சமாளித்துக் கொண்டு இருவரும் சைக்கிளில் ஏறி வீட்டை நோக்கி விரைந்தோம்.

---

## புத்தகப் பிரேமை!



# டால்டாவில்

## பொரித்த மசாலாதிணித்த குடமிளகாய்களினால் உங்கள் உணவை அதிக சத்துடையதாகச் செய்யுங்கள் !

தேக ஆரோக்கியத்திற்கு அவசியமான தாதுப்பொருள்களும், விடமின்களும் குடமிளகாய்களிலிருக்கின்றன. அவைகளை இப்படி தயாரித்துச் சாப்பிடுங்கள். முதலாவதாக, மிளகாய்களை நீராவியில் வெந்து காம்பு பாகத்தை நறுக்கி விதைகளை அகற்றவும். பிறகு வேகவைத்த பட்டாணி, காரட் அல்லது வெந்து பொடிசெய்த முட்டை, வெந்து உதிர்த்த உருளைக்கிழங்கு அல்லது வெந்து துருவப்பட்ட மாமிசம் இவைகளுடன் அரிந்து வதக்கிய வெங்காயம், நறுக்கிய இஞ்சி, கொத்தமல்லி இலை, கடுகு, உப்பு, எலுமிச்சஞ்சார் இவைகளைகலந்து மசாலாசெய்து அதனுட் திணிக்கவும். காம்பு பாகத்தை மிளகாய்களின் மேல் வைத்து குச்சிகளினால் பொருத்தவும். குழிவுகுறைந்த வாணலியில் டால்டாவை சூடாக்கி அதில் மிளகாய்களை பக்குவமாகும்வரை பொரிக்கவும்.

டால்டா ஒரு சுத்தமான தாவரக்கொழுப்பாகையால் அது அதிக நேரம் சூட்டைத்தாங்குகிறது—எனவே, உணவுகள் ஒழுங்காக முழுவதும் பக்குவமாவதற்கு போதுமான சாவகாசம் அளிக்கிறது.

எதிர்பாராத அதிதிகளுக்கு
நொடிப்பொழுதில் உணவு!

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது
என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்!

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1



# எதிர் வீட்டுப் பெண்

**வி. எஸ். ஆர்.**

கல்யாணப் பத்திரிகையைக் கையில் வைத்துக்கொண்டு கண்ணீர் உகுத்தாள் கோமதி.

"பூங்குடி ராமசாமி ஐயர் குமாரத்தி கோமதியை, மாங்குடி கைலாசம் ஐயர் குமாரன் சிரஞ்சீவி வில்வாத்ரி ஐ. ஏ. எஸ். ஸுக்குக் கல்யாணம் செய்து கொடுப்பதாய்ப் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு......"

மேலே படிக்க முடியாமல் கண்ணீர் அவள் பார்வையை மறைத்தது. துக்கம் விம்மிக் கொண்டு வர அவள் படுக்கையில் சாய்ந்தாள்.

இவ்வாறு அவள் கண்ணீர் விட்டதற்குக் காரணம், வில்வாத்திரியைக் கல்யாணம் செய்து கொள்ள அவளுக்கு இஷ்டமில்லாதது அல்ல. வில்வாத்ரி கறுப்புத்தான் ஆயினும் நல்ல வசீகரமான தோற்றமுள்ளவன். களை பொருந்திய முகம். சில வாரங்களுக்கு முன் அவன் பெண் பார்க்க வந்த போது, "குழந்தை, உனக்குப் பையனைப் பிடித்திருக்கிறதா?" என்று கேட்டார் அவள் தந்தை ராமசாமி. வெட்கம் மேலிட முகத்தை மறைத்துக் கொண்டு உள்ளே ஓடிவிட்டாள் கோமதி. அவள் சம்மதத்தை ஒருவாறு ஊகித்துக் கொண்ட பெற்றோர்களும் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்தனர்.

அழகில் சிறந்த கோமதியைக் கல்யாணம் செய்து கொள்ள வில்வாத்ரி தயங்குவானா? பிள்ளையும் சம்மதத்தைத் தெரிவித்த பிறகு ராமசாமி லௌகிக விஷயங்களைப் பற்றியும் பேச ஆரம்பித்தார். ஆனால் பிள்ளை வீட்டாரின் எண்ணத்தை அறிந்து கொண்டதும் அவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. கையில் அவர்கள் பத்தாயிரம் ரூபாய் வரதட்சிணை எதிர்பார்த்ததாகத் தோன்றியது. இதைத் தவிர ஒரு புது மோட்டார், ஒரு வீடு, தடபுடலான கல்யாணம் எல்லாவற்றையும் நிபந்தனைகளாகப் போட்டனர். எல்லாச் செலவுகளும் சேர்ந்து ஒரு லக்ஷ ரூபாயில் வந்து நின்றது.

"ஸப் கலெக்டர் வேலை பார்க்கும் பையனுக்கு மாமனார் ஒரு கார் வாங்கிக் கொடுக்க வேண்டாமா? நீங்கள் மாப்பிள்ளைக்கு வாங்கிக் கொடுக்கும் வீட்டை உங்கள் பெண்தானே ஆளப் போகிறவள்?" என்று ராமசாமியிடம் கைலாசய்யர் வாதித்தார்.

என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தார் ராமசாமி. அவர் காலேஜில் போதகாசிரியராக இருந்தார். அடுத்த வருஷம் ரிடையராக வேண்டியவர். அவர் இதுவரை கஷ்டப்பட்டுத் தேடி வைத்திருந்தது ஒரு லட்சத்துக்கு மேலிராது. தாம் தேடிய செல்வம் அவ்வளவையும் பெண்ணுக்காகச் செலவழிப்பதா? அது நியாயமாகுமா? கடைசி காலத்தில் அவர் கதி என்ன? உயிருள்ள வரை அவருக்குப் பென்ஷன் கிடைத்துவிடும். தம்மைப் பற்றி அவர் கவலைப்படவில்லை.

ஆனால், அவருக்கு ஒரே ஒரு குமாரன் இருந்தான்.

சுந்தரம் அப்பொழுதுதான் மின்சார என்ஜினீயருக்குப் படித்து விட்டு ஒரு கம்பெனியில் சேர்ந்திருந்தான். கோமதியை விட இரண்டு வயது மூத்தவன். எடுத்ததுமே மூன்னூறு ரூபாய் சம்பளம் கிடைத்தது. போகப் போகச் சம்பளம் உயர்ந்து மிகவும் நல்ல நிலைமையில் இருப்பான் என்பதில் சந்தேகமில்லை.

அவனுக்குப் பெண் கொடுக்கப் பலர் ஏற்கெனவே போட்டியிட்டனர். எதிர் வீட்டில் வெங்கடேச ஐயர் என்ற ரிடையரான ஒரு ரயில்வே உத்தியோகஸ்தர் இருந்தார். அவர் தமது பேத்தி பங்கஜத்தைச் சுந்தரத்துக்குக் கொடுக்க மிகவும் ஆசைப்பட்டார். இப்படிப்பட்ட சுந்தரத்துக்குத் தாம் சொத்துக்கள் விட்டுச் செல்ல வேண்டிய அவசியம் இல்லை என்று நினைத்தார் ராமசாமி.

மேலும், தம் பெண்ணிடம் அவருக்கு வாஞ்சை இருந்தது. தாயில்லாப் பெண்ணுக்கு ஒரு குறையும் இருக்கக் கூடாது என்பது அவர் எண்ணம். உயர்ந்த உத்தியோகத்திலுள்ள பையனுக்குப் பெண்ணைக் கொடுக்க வேண்டுமென்று வெகு காலமாகக் கனவு கண்டார். ஐ. ஏ. எஸ். பரீட்சையில் முதன் முதலில் தேறிய பையனைக் கண்டதும் எப்பாடு பட்டாவது அவனை மாப்பிள்ளையாகக் கொள்ள நினைத்தார். ஆகவே கைலாசமய்யர் பண விஷயத்தில் ரொம்ப பிடிவாதமாக இருந்ததைப் பார்த்து, ராமசாமி அவர் கடும் நிபந்தனைகளையும் ஒப்புக்

கொண்டு விட்டார். நிச்சயதார்த்தத்துக்குத் தேதியும் குறிக்கப்பட்டது.

நிபந்தனைகளைத் தெரிந்து கொண்டதும் சுந்தரம் முதலில் திகைத்துப் போனான். ஆனால், தகப்பனாரின் பிடிவாத குணமும் அவருக்குப் பெண்ணிடமுள்ள வாஞ்சையும் அவனுக்கு நன்றாகத் தெரியும். தகப்பனார் வார்த்தைக்கு எதிராக அவன் எப்பொழுதும் ஒரு வார்த்தைகூடச் சொன்னதில்லை.

அன்று மாலை ராமசாமி எதிர் வீட்டிலிருந்த வெங்கடேச ஐயருடன் சென்றார். அந்தரங்க விஷயங்களை இருவரும் மனம் விட்டுப் பேசிக் கொள்வது வழக்கம். ராமசாமி தமது பெண்ணின் கல்யாணத்தைப் பற்றியும் பிள்ளை வீட்டாரின் நிபந்தனைகளைப் பற்றியும் பிரஸ்தாபித்துவிட்டு, "கைலாசமய்யர் மூர்த்தண்யமாக இருக்தார்; குழந்தையின் க்ஷேமத்தைக் கருதி அவர் நிபந்தனைகளை ஒப்புக் கொண்டு விட்டேன். என்ன செய்கிறது?" என்றார்.

அதைக் கேட்ட வெங்கடேச ஐயருக்குத் தூக்கிவாரிப்போட்டது. அவர் திகைப்பை மறைத்துக் கொண்டு தம் கட்சியை ஆணித்தரமாக எடுத்துச் சொன்னார்.

"மிஸ்டர் ராமசாமி! நீங்கள் பெண்ணுக்காக லட்ச ரூபாய் செலவிடுவது ரொம்ப அக்கிரமம். உங்களுடைய பிள்ளையைப் பற்றி நீங்கள் நினைத்துப் பார்க்கவே யில்லையே!" என்றார்.

"அவன் நல்ல நிலைமையில்தானே இருக்கிறான்? மேலும், இது நான் தேடின சொத்துத்தானே? அதை இஷ்டம் போல் செலவு செய்ய எனக்கு உரிமை இல்லையா?"

"என்ன இருந்தாலும் அவனுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய சொத்தை எப்படி இல்லை என்று சொல்லமுடியும்? பெண் கொடுப்பவர்கள் அவனுக்கு என்ன சொத்து இருக்கிறது என்று கேட்க மாட்டார்களா?"

"சுந்தரத்துக்குப் பெண் கொடுப்பவர்கள் அவன் சொத்துக்காகக் கொடுக்க வேண்டியதில்லை. குணம், படிப்பு, வேலை இவைகளுக்காகக் கொடுத்தால் போதும்" என்று சிரித்தவாறே பதிலளித்தார் ராமசாமி.

"குணத்தையும் யோக்கியதையையும் பார்த்து விட்டுத்தானா உங்கள் பெண்ணைக் கொடுக்க நினைக்கிறீர்கள்? பையன் அந்தஸ்து, சொத்து இவற்றை யெல்லாம் பார்த்துவிட்டுத்தானே லக்ஷ ரூபாய் செலவு செய்தாவது பெண்ணைக் கொடுக்கப் பார்க்கிறீர்கள்? உங்களைப்போல் மற்றவர்களும் ஜாக்கிரதையாக இருக்க மாட்டார்களா?" என்று வெங்கடேச ஐயரும் சிரித்துக் கொண்டே கேட்டார்.

*

அன்று தாத்தா உலாவப் புறப்பட்டுப் போனதும் பங்கஜம் தன் சிநேகிதி கோமதி



யைப் பார்க்க வந்தாள். அப்பொழுது கோமதியும் சுந்தரமும் ஹாலில் 'கேரம்' விளையாடிக் கொண்டிருந்தனர். பங்கஜத்தைக் கண்ட சுந்தரம் சட்டென்று எழுந்து, "கோமதி, எனக்கும் கை வலி எடுத்து விட்டது. நீ கோமதியுடன் கொஞ்ச நேரம் 'கேரம்' ஆடு!" என்று சொல்லி விட்டு வெளியில் போனான்.

பங்கஜமும் சுந்தரமும் சகஜமாகப் பேசிக் கொள்வார்கள். முதன் முதலில் பங்கஜத்தைப் பார்த்ததுமே சுந்தரம் அவளிடம் தன் மனதைப் பறிகொடுத்து விட்டான். இரண்டு வருஷங்களுக்கு முன்னால் பங்கஜம் தன் தாத்தாவுடனும் விதவையான தன் சின்னம்மாவுடனும் எதிர் வீட்டுக்குக் குடித்தனம் வந்தாள். அப்பொழுதெல்லாம் அவன் எதிர் வீட்டைப் பார்த்து அடிக்கடி பெருமூச்செறிந்தான். பின்னர், அந்தப் பெண் தன் சகோதரியின் வகுப்பில் படிக்கிறாள் என்பதைக் கேட்டதும் அவன் ஆவல் வளர்ந்தது. காலையில் எதிர்வீட்டுப் பெண் பங்கஜம் கோமதியைப் பார்க்க வருவாள். கோமதியும் பங்கஜமும் இணை பிரியாத சிநேகிதிகள் ஆயினர்.

பங்கஜம் அவர்கள் வீட்டுக்கு வரும்போதெல்லாம், விவரிக்க இயலாத மனக் கிளர்ச்சி யடைந்தான் சுந்தரம். ஆரம்பத்தில் நயன பாஷையில் பேச ஆரம்பித்த அவர்கள் இருவருக்கும் நேருக்கு நேராக நின்று பேசிக் கொள்வதற்கு வெகு நாட்கள் பிடிக்கவில்லை.

பங்கஜத்தின் தகப்பனார் வட இந்தியாவில் ஒரு கம்பெனியில் வேலை பார்த்து வந்தார். ஊருக்கு ஊர் அவரை மாற்றிக் கொண்டு வந்தபடியால், பெண்ணின் படிப்பைக் கருதிச் சென்னையில் ஒரு குடித்தனம் வைக்க நேரிட்டது. கிடயாலிக் கிராமத்தில் இருந்து வந்த தன் தகப்பனாரையும் தன் விதவைத் தங்கையையும் சென்னைக்கு வந்து பெண்ணைக் கவனித்துக் கொள்ளும்படி ஏற்பாடு செய்தாள் பங்கஜத்தின் தாயார். மேலும், பங்கஜத்தைச் சென்னையில் விட்டு வைத்திருந்தால், அவள் கல்யாண விஷயமும் சீக்கிரத்தில் முடியும் என்பது அவள் தகப்பனாரின் நினைப்பு.

ஒருநாள் வெங்கடேச ஐயர் சுந்தரத்தின் ஜாதகத்தைக் கொடுக்கும்படி ராமசாமி ஐயரைக் கேட்டார்.

ஜாதகமும் பொருத்தமாக இருந்தது. ஆனால், தங்கை கோமதிக்குக் கல்யாணம் ஆனபிறகுதான் தான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகக் கூறிவிட்டான் சுந்தரம். ஆகவே, கோமதியின் கல்யாணம் முடிவதை எதிர்பார்த்திருந்தனர் பங்கஜத்தின் குடும்பத்தினர்.

கோமதியைப் பார்க்க வில்வாத்ரி வந்து போனதும், கல்யாணப் பேச்சு நடந்து வருவதும் எதிர் வீட்டுப் பெண்ணான பங்கஜத்துக்குத் தெரியாமலிருக்குமா? அடிக்கடி அவள் ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளையைப் பற்றிக் கேலி செய்வாள். கோமதி சும்மா இருக்கவில்லை. தன் சகோதரன் எதிரில் அவளைக் கேலி செய்து அவளுடைய வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வாள்.

★

இன்ப வாழ்க்கையைக் கனவு கண்டு கொண்டிருந்த சுந்தரத்துக்குப் பெரும் அதிர்ச்சி ஏற்பட்டது. அன்று மாலை ராமசாமி ஐயர் பெண்ணை அழைத்துக் கொண்டு ஜவுளிக் கடைக்குச் சென்றிருந்தார். சுந்தரம் தான் புதிதாக வாங்கியிருந்த ரேடியோப் பெட்டியைத் திருகிக் கொண்டிருந்தான். ஆனால் ஒரு கண் எதிர் வீட்டில் இருந்தது. சாயங்காலம் அந்த நேரத்தில்தான் பங்கஜம் 'கேரம்' ஆட வருவது வழக்கம்.



"என் பையன் ஒரு மார்க்கில் பெயிலாகிவிட்டான், ஸார்!"

"நம்ம பையன் தேவலைபோலிருக்கிறதே! அவன் ஏழு மார்க்கில் பெயிலாகி யிருக்கிறானே!"

சிறிது நேரத்திற் கெல்லாம் அவள் தெருவைக் கடந்து உள்ளே வருவதைக் கடைக் கண்ணால் கவனித்தான். அவள் பக்கத்தில் வந்து தயங்கித் தயங்கி நிற்பதைக் கவனித்தும் கவனியாதவன்போல் ரேடியோவை விஷமம் செய்து கொண்டிருந்தான். திடீரென்று பக்கத்தில் விம்மல் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தான் சுந்தரம். பங்கஜத்தின் முகம் சிவந்திருந்தது. சட்டென்று அவள் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

“ஏன்? என்ன நடந்தது?” என்று பரபரப்புடன் கேட்டான்.

“நான் இனிமேல் உங்களை மறந்துவிட வேண்டியதுதான். இனிமேல் நான் இங்கே வரக்கூடாதாம். தாத்தா சொல்கிறார்!”

“ஏன்?” என்று பதறினான் சுந்தரம்.

“உங்களுக்கிருந்த அத்தனை சொத்தையும் கோமதியின் கல்யாணத்துக்குச் செலவு செய்யப் போகிறாராம் உங்கள் அப்பா. மாதச் சம்பளத்தை மட்டும் நம்பிக்கொண்டிருக்கும் ஏழைக்குத் தாத்தா என்னைக் கல்யாணம் செய்து கொடுக்கமாட்டாராம். என் அம்மா, தாத்தா கிறின கோட்டைத் தாண்டமாட்டாள். என்னை உங்களுக்குக் கல்யாணம் செய்து கொடுக்க அப்பாவும் ஒருநாளும் சம்மதிக்கப் போகிறதில்லை. இதற்கு என்ன செய்வது?”

கல்லாய்ச் சமைந்து நின்று விட்டான் சுந்தரம்.

“தை மாதம் பிறந்ததுமே நம் கல்யாணத்தை நடத்தி விடுவதாகச் சொன்னார் தாத்தா. நீங்கள் தான் தள்ளிப் போட்டீர்கள். அப்பொழுதே நம் கல்யாணம் ஆகியிருந்தால் கோமதியின் கல்யாணத்துக்கு எத்தனை ரூபாய் செலவழித்தாலும் இப்பொழுது தாத்தா என்ன சொல்ல முடியும்?” என்று கூறிக் கண்ணீர் விட்டாள் பங்கஜம்.

“சொத்துக்காக யாரும் என்னைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டியதில்லை” என்றான் சுந்தரம் ஆத்திரத்துடன். ஆனால் அந்த வார்த்தையைச் சொல்லியிருக்க வேண்டியதில்லை என்று மறுகணம் நினைத்தான். பங்கஜத்தின் மனம் அவனுக்குத் தெரியாதா? எதற்காக மேலும் அவள் மனதை நோக வைக்கவேண்டும்?

“கோமதி நம்முடைய சந்தோஷத்துக்கு இப்படிக் குறுக்கே வந்து நிற்பாள் என்று நான் இத்தனை நாளும் கொஞ்சம் கூட நினைக்கவில்லை” என்றாள் பங்கஜம்.



டைரக்டரைப் பார்ப்பதற்கு வந்தவர்:—உங்களைப் பார்ப்பதற்காக வந்தேன். உங்கள் ‘பியூன்’ என்னை ரொம்ப நேரமாகக் காக்க வைத்துவிட்டான்.

டைரக்டர்:— உங்களையா காக்க வைத்துவிட்டான்? டேய்! இத்தனை சர்வீஸ் ஆகியும் உனக்கு யாரைக் காக்க வைக்கிறது என்று தெரியவில்லையே! இவரை அப்பொழுதே வெளியில் அனுப்புவதற் கென்ன? அவரை ஏன் இங்கே காக்க வைத்துக் கொண்டிருந்தாய்?

---

அப்பொழுது வெளியிலிருந்து உள்ளே வந்த கோமதியின் காதில் அவர்கள் பேசிக் கொண்ட ஒவ்வொரு வார்த்தையும் விழுந்தது. பங்கஜம் கூறிய கடைசி வார்த்தைகளைக் கேட்டதும், அவள் கையிலிருந்த புடைவைப் பார்ஸல் கீழே நழுவி விழுந்தது.

அன்று இரவு முழுதும் கோமதி தூங்கவில்லை. அவர்கள் சந்தோஷத்துக்குத் தான் குறுக்கே நிற்பதாகப் பங்கஜம் சொன்னது எவ்வளவு வாஸ்தவம்? பார்க்கப்போனால் அவள் வில்வாத்ரியைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ளவில்லை. ஆனால் அண்ணாவோ பங்கஜத்திடம் உயிரையே வைத்திருக்கிறான். அவர்கள் கல்யாணம் நடக்காவிட்டால் இருவர் வாழ்க்கையுமே பாழாய்ப் போகும். தனக்கு இந்தக் கல்யாணம் செய்து கொள்வதில் கொஞ்சமும் இஷ்டமில்லை என்று அப்பாவிடம் சொல்லி விடலாமா? வேறு யாரைக் கல்யாணம் செய்து கொண்டாலும் இவ்வளவு பணம் செலவு செய்யும்படி நேராது. அப்பொழுது பங்கஜத்தை அண்ணாவுக்குக் கல்யாணம்

செய்து கொடுப்பதற்கு அவனுடைய தாத்தா ஆட்சேபிக்க மாட்டாரல்லவா?

ஆனால், அப்பா அவன் சொல்வதைக் கேட்பாரா? அவர் எதிரில் ஒரு வார்த்தை பேசுவதற்குக்கூட அவன் பயப்படுவான். தன் மனதிலிருப்பதைச் சொல்லுவதற்குப் பல தடவை தன்னைத் தைரியப்படுத்திக் கொண்டான். ஆனால் அவரருகில் போகும் போது தைரியம் பறந்து போய் விடும்.

மேற்படி சம்பவம் நடந்த பிறகு பங்கஜம் அவர்கள் வீட்டுக்கு வருவதில்லை. சுந்தரத்தின் முகத்தில் வேதனையும் ஏமாற்றமும் காணப்பட்டது. அன்னுவைப் பார்க்கும் போதெல்லாம், தான் பெரிய குற்றம் செய்து விட்டதுபோல் கோமதியின் மனம் குறுகுறுத்தது.

நிச்சயதார்த்தத்துக்கு முதல் நாள் கோமதி அப்பாவிடம் சென்று, “அப்பா! இந்தக் கல்யாணத்தில் எனக்குச் சம்மதமில்லை” என்றான். தன் தைரியத்தைக் கண்டு அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது. ராமசாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது. “ஏன்?” என்று கேட்ட தோரணையிலிருந்தே நடுங்கிப் போனான் கோமதி.

“அன்னுவின் வாழ்க்கையை நான் பாழாக்கின பிறகு எனக்குக் கிடைப்பதும் ஒரு வாழ்வா?” என்று கூறி நடந்ததைச் சுருக்கமாகச் சொன்னான் அவன். அதைக் கேட்டு ராமாமிருதம் சிரித்தார்.

“பேஷ், ரொம்ப நன்றாயிருக்கிறது! வெங்கடேச ஐயர் அன்றைக்குக் கூட என்னிடம் ‘கூட’மாக ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். அப்பொழுதே நினைத்தேன். இவர் பேத்தியைக் கொடுக்காவிட்டால் நம் அந்தஸ்துக்குக் கல்யாணமே நடக்காதா? போகட்டும். மாப்பிள்ளைக்குச் சொத்து இருக்க வேண்டும் என்று கேட்பதுடன் நிறுத்திக் கொண்டாரே! தம் பேத்திக்கு லக்ஷ ரூபாய் வரதட்சிணை கொடுக்க வேண்டுமென்று கேட்காமல் விட்டாரல்லவா?” என்றார்.

கோமதி எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். “காதலாவது கத்தரிக்காயாவது! நீ உலகம் தெரியாத குழந்தை! உன் காரியத்தைப் பார்!” என்று முடிவாக உத்தரவிட்டார் ராமசாமி. என்ன செய்வதென்று தெரியாமல் கலங்கினான் அவன். நிச்சயதார்த்தமும் நடந்தது. கல்யாணப் பத்திரிகையும் அச்சாகி வந்தது. அதைப் பார்த்துவிட்டுத்தான் கதையின் ஆரம்பத்தில் கூறியபடி, கோமதி மனமுடைந்து கண்ணீர் விட்டான். அதற்கேற்றாற்போல் கல்யாண தினமும் நெருங்கிக் கொண்டிருந்தது.

★

இப்பொழுதுதான் கதையில் எதிர்பாராத சம்பவம் நடந்தது. ஒரு நாள் காலை சுந்தரம் ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தபோது, பங்கஜம் ஓடோடியும் வந்து, “வீட்டுக்கு வாருங்கோ. தாத்தாவுக்கு உடம்பு சரியாக இல்லை” என்று பதறிக் கூப்பிட்டாள். சுந்தரமும் ஓடிச் சென்று கிழவர் மயக்கம் போட்டுக் கிடப்பதைப் பார்த்தான். “இப்பொழுதுதான் காய்கறி வாங்கிக் கொண்டு திரும்பி வந்தார். ‘வெய்யிலாக இருக்கிறது. நீங்கள் போக வேண்டாம்’ என்று சொன்னேன். கேட்கவில்லை” என்றாள் பங்கஜத்தின் சின்னம்மா. சுந்தரம் உடனே டாக்டருக்குப் ‘போன்’ செய்தான். டாக்டர் வந்து பரீட்சை செய்து விட்டு, இருதயம் பலவீனமாக இருப்பதாகவும், சில நாட்கள் படுத்த படுக்கையிலேயே இருக்க வேண்டுமென்றும் கூறினார். பிரக்ஞை வருவதற்கு வெகு நேரம் ஆயிற்று. மிகவும் பயந்து போன பங்கஜம் தன் பெற்றோர்களுக்குத் தந்தி கொடுத்தாள். அவர்களும் இரண்டு நாட்களுக்கெல்லாம் வந்து விட்டனர். கிழவரின் இறுதிக்காலம் வந்து விட்டது என்பது எல்லோருக்கும் தெரிந்து விட்டது. அந்த நெருக்கடியான சமயத்தில் சுந்தரம் அவர்களுக்கு மிகவும் உதவி புரிந்தான். சில நாட்களுக்கெல்லாம் கிழவர் கண்ணை மூடினார்.

இதற்குப் பிறகு மிகவும் மகிழ்ச்சியைத் தரும் சம்பவம் நடந்தது. பங்கஜத்தின் பெற்றோர்கள் தங்கள் பெண்ணின் மனவிருப்பத்தைத் தெரிந்து கொண்டனர். சொத்தைப் பற்றியே அவர்கள் கவலைப்படவில்லை. அவளைச் சுந்தரத்துக்கே கொடுப்பதென்று முடிவு செய்தனர். சுபயோக சுபதினத்தில் கோமதிக்கும் வில்வாத்திரிக்கும் விவாகம் நடந்தபோது, பங்கஜத்தின் விவாகமும் விமரிசையாக நடந்தது. எல்லோரும் நினைத்ததைப்போல் சுந்தரம் உத்தியோகத்தை மட்டும் நம்பிக் கொண்டிருக்கும் ஏழையாக இல்லை. வெங்கடேச ஐயர் தம் அருமைப் பேத்திக்கு முழுசாக நான்கு லட்சம் ரூபாய் உயில் எழுதி வைத்து விட்டுப் போயிருக்கும்போது, அவனை எப்படி ஏழை என்று சொல்ல முடியும்?

இப்போது! சாப்பிட்டவுடன்

# கோல்கேட் டென்டல் க்ரீமால் பல் துலக்குவதானது பல் சிதைவைத் தவிர்க்க உதவுகிறது

இதுவே பத்திரமும் உறுதியுமான வழி என்பது ருசுவாகிவிட்டது.

பிரபல பல் வைத்தியர்களின் மேற்பார்வையில் ஒரு தொகுதி காலேஜ் மாணவர்கள் சாப்பாட்டிற்குப் பின் 'கோல்கேட்' உபயோகித்துப் பல் துலக்கினர்—மற்றொரு தொகுதியினர் வழக்கப்படி பல் துலக்கினர். 'கோல்கேட்' உபயோகித்தோருக்குப் பற்களில் ஓட்டை விழுவது வேகமாகக் குறைந்தது. மற்றவர்களுக்கோ புதிய புதிய ஓட்டைகள் அதிகரித்தது. 'கோல்கேட்' எல்லாவித பல் சிதைவையும் தடுக்கும் என்று ஜம்பம் கூறவில்லை. ஆனால் 'கோல்கேட்' உபயோகித்தால் பல் சிதைவை நிறுத்த உதவுகிறது என்பது நிரூபிக்கப் பட்டிருக்கிறது.




எப்போதும் கோல்கேட் *உபயோகியுங்கள்
அதன்மூலம் உங்கள் பற்களை துலக்குவதோடு கூடவே சுவாச துர்கந்தத்தை அகற்றி
பல் சிதைவைத்தடுங்கள்!

*சாப்பிட்டவுடன்

கோல்கேட் நைலன் டூத் பிரஷை வாங்குங்கள்




நைலன் குஞ்சங்கள் உங்கள் ஈறுகளை பாதுகாப்பது போல் அமையப்பெற்றுள்ளன.

---

உரோமத்தை உதிர்த்து

## உருவைக் குலைக்கும் சரும வியாதிகளை

உலகப் புகழ் பெற்ற ஜாம்பக் சொஸ்தமாக்கும்



உரோமம் உதிர்த்து உருக்குலைக்கும் சரும வியாதிகளால் அவதியுறுவானேன்? சரிவர ஜாம்பக் உபயோகித்து வந்தால் அந்த ரோகங்களைப் போக்கி உங்கள் சருமத்திற்கு ஆரோக்கியமளிக்கிறது. ஜாம்பக்கிலுள்ள அபூர்வமான மூலிகை மருந்து சத்துக்கள் சருமத்தின் ஊடே சென்று விடுகின்றன. அதனால்தான் ஜாம்பக் வெகு விரைவில் - கமைச்சல் வேக்காடுகளை ஆற்றி, சருமத்திலேற்படும் கசிவைத் தடுத்து வியாதிக் கிருமிகளைக் கொன்று, புண் பட்ட சருமத்தைப் பண்படுத்துகிறது. மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்பதற்கு உத்தரவாதம்




No. 4

எப்பொழுதும் உபயோகியுங்கள்

# Zam-Buk

ஆறநலவித்து குணமாக்கும் க்ருமி நாசனக் களிம்பு




## சரிதான் !

மாஜிஸ்ட்ரேட்:—நீ ஏன் உனக்குச் சிகிச்சை செய்யும் டாக்டரின் கைக் கடிகாரத்தைத் திருடினாய் ?

குற்றவாளி:—டாக்டர் மூன்று மணி நேரத்துக்கு ஒரு முறை மருந்து சாப்பிடச் சொல்லி மருந்து கொடுத்தார். ஆனால் என்னிடம் கடிகாரம் இல்லை. ஆகையினால்......

★

## எப்படி ?

கார் ஓட்டச் சொல்லிக் கொடுப்பவர்:—பார்த்தீர்களா, இதுதான் 'கியர்ஷிப்டு'—கீழே இருப்பது, 'பிரேக்'—அதோ, அங்கே......!

கற்றுக் கொள்பவர்:—ஸார், எனக்கு ஒவ்வொன்றாய்ச் சொல்லிக் கொடுத்தால் நல்லது ; முதலில் காரை ஓட்டச் சொல்லிக் கொடுங்களேன் !

★

## பாதுகாப்பு !

"ஏன் ஸார் ! ஒரு தாரத்துக்குமேல் விவாகம் செய்து கொள்ளக் கூடாது என்று சட்டம் ஏற்பட்டிருக்கிறதாமே ! அது எதற்கு ?"

"உனக்கு அநுபவம் போதாது. நீ சின்னவன். அதனால்தான் அப்படிக் கேட்கிறாய் ; ஸ்திரீகளிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முடியாத அப்பாவிப் புருஷர்களுக்கு மேற்படிச் சட்டம் எவ்வளவு தூரம் பாதுகாப்பு அளிக்கிறது என்பதை நீ பின்னால் தெரிந்து கொள்வாய் !"

## நியாயம் !

அம்பி :—நீ என்மேலே கல்லை விசி எறிந்தாய் என்று உன் அம்மாவிடம் சொல்லிவிடுகிறேன், பார் !

தம்பி :—நீதானே முதலிலே என் மேல் கல்லை விசினாய் ?

அம்பி :—ஆமாம். ஆனால் அதுதான் குறி தவறிவிட்டதே !

★

## அநுபவம்

வக்கீல் (நீண்ட நேரம் குறுக்கு விசாரணை செய்து விட்டு):—அம்மணி, இந்தக் கேள்விகளினால் தங்களை ரொம்பவும் தொந்தரவு செய்து விட்டேனோ ?

அவள்:—அதெல்லாம் ஒன்றுமில்லை. எனக்கு ஏழு வயதில் பிள்ளை இருக்கிறான். அவனோடு எனக்கு இந்த அநுபவம் உண்டு !

★

## எப்படி ?

தகப்பனார் தம் சிறு மகனுக்கு ஆகர்ஷண சக்தியைப் பற்றி விளக்கிக் கொண்டிருந்தார்.

"பூமி உருண்டை வடிவானது ; சூரியனைச் சுற்றுகிறது. இதை உன் வாத்தியார் சொல்லிக் கொடுத்தார் அல்லவா ?" என்று கேட்டார் அப்பா.

"ஆமாம், அப்பா !" என்றான் சிறுவன்.

"சரி, இப்போது சொல் : பூமி சூரியனைச் சுற்றுகிறதே, அப்போது அது ஏன் விழவில்லை ?" என்று கேட்டார் அப்பா.

"அது விழுவதற்கு இடம் கிடைக்கவில்லை. அதனாலேதான் விழவில்லை, அப்பா !" என்றான் சிறுவன்.

★

## தொந்தரவு !

அவர் :—(அந்த பங்களாவுக்குப் புதிதாகக் குடி வந்தவர்):—ஸார், இந்தப் பக்கத்தில் நாய்கள் அதிகமோ ?

வீட்டுக்காரர் :—இல்லை, இல்லை. அந்தமாதிரி ஒரு தொந்தரவும் இங்கே கிடையாது.

அவர் :—சரிதான் ! ஏன் அதைக் கேட்கிறேன் என்றால் என்னிடம் இரண்டு நாய்கள் இருக்கின்றன. அவை இரண்டும் இராத்திரி முழுவதும் ஓயாமல் குரைக்கும். கூட இதர நாய்களும் சேர்ந்து கொண்டால் எனக்குத் தொந்தரவாய்ப் போய்விடும் அல்லவா ?

# புவனாவின் புனர்ஜன்மம்

**டாக்டர் டி. எஸ். துரைசாமி**

**பி**ரசங்கதார் ராமாமிர்த ஐயர் என்றால் திருவாரூரில் தெரியாதவர்களே கிடையாது. அவருக்கு அவ்வளவு செல்வமும் செல்வாக்கும் இருந்தது. ஆனால் அவரை ஒரே ஒரு கவலை மட்டும் நிம்மதியில்லாமல் செய்து வந்தது. தம் மனக் கவலையைப் போக்கிக் கொள்ள அவர், நாகப் பிரதிஷ்டை, சர்ப்ப சாந்தி, சேது ஸ்நானம் முதலியவற்றையெல்லாம் தமது தர்ம பத்தினியோடு மிகவும் பக்தி சிரத்தையுடன் செய்து வந்தார்.

அந்தத் தம்பதிகளின் பக்தி சிரத்தை வீண் போகவில்லை. ராமாமிர்த ஐயரின் மனைவி ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அவர்கள் குறை நீங்கியது. ராமாமிர்த ஐயர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. ஏழை எளியவர்களுக்கெல்லாம் தான தர்மங்கள் ஏராளமாய்ச் செய்தார். தமது அருமைப் பெண்ணுக்குப் புவனேசுவரி என்று பெயரிட்டுக் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்து வந்தார்.

புவனாவுக்கு ஐந்து வயது நிரம்பியதும் ராமாமிர்த ஐயர் அவளைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தார். புவனாவும் படிப்பில் மிகவும் புத்திசாலியாக விளங்கினாள்.

ராமாமிர்த ஐயரின் ஆனந்த வாழ்க்கையில் கொஞ்சம் கொஞ்சமாக இருள் படிய ஆரம்பித்தது. அவர் மனைவியைக் கொடிய காசநோய் பற்றிக் கொண்டு வாட்டத் தொடங்கியது. ராமாமிர்த ஐயர் பணச் செலவைப் பாராமல் அவளுக்குச் சிகிச்சை செய்ய வாரி இறைத்தார்; ஆனால் ஒன்றும் பயன்படவில்லை. அவர் மனைவி நாளுக்கு நாள் மெலிந்து கொண்டே வந்தாள்

ஒருநாள் அவள் தன் கணவனை அழைத்தாள்.

"நான் இனிமேல் பிழைக்க மாட்டேன். நம் அருமைக் கண்மணி புவனாவுக்கு நான் இருக்கும் போதே கல்யாணம் செய்து விடுங்கள். படுக்கையில் இருந்தபடியாவது அவளை நான் மாலையும் கழுத்துமாகப் பார்க்க முடியும் அல்லவா?" என்று நீண்ட பெருமூச்சுகளுக்கு இடையே மிகவும் சிரமத்துடன் சொன்னாள்.

இதைக் கேட்ட ராமாமிர்த ஐயர் தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டு விழித்தார். அவருக்குச் சீர்திருத்த நோக்கமெல்லாம் உண்டு. பால்ய விவாகத்தை அவர் மனம் கொஞ்சங்கூட ஒப்பவில்லை. ஆனால் மரணப் படுக்கையில் இருக்கும் மனைவியின் விருப்பத்தைத் தள்ளவும் அவரால் முடியவில்லை. நீண்ட நேரம் யோசனை செய்தார். கடைசியில் மனைவியிடமுள்ள அன்புதான் வென்றது.

புவனாவுக்கு வரன் பார்க்கத் தொடங்கினார் ராமாமிர்த ஐயர். கூடிய சீக்கிரமே நாகப்பட்டணம் சேஷாசலம் ஐயரின் பிள்ளை பிரபாகரனுக்கும் புவனாவுக்கும் அதிவிமரிசையாய்க் கல்யாணம் நடந்தது. அப்பொழுது புவனாவுக்கு வயது ஆறு; பிரபாகரனுக்கு வயது பன்னிரண்டு.

## 2

**த**லை தீபாவளிக்குப் பிரமாதமாக ஜவுளி தினுசுகள் எடுத்து வந்தார் ராமாமிர்த ஐயர். பக்ஷணங்களில் பல வகைகளும் செய்து தயாராக வைக்கப்பட்டிருந்தன.

தீபாவளிக்கு மூன்று நாட்களுக்கு முன்பு அன்றுதான் சம்பந்திகள் வர வேண்டிய தினம். ராமாமிர்த ஐயர் அதிகாலையில் காருடன் புறப்பட்டு ஸ்டேஷனுக்குப் போனார். சரியான நேரத்தில் வண்டி வரவில்லை. ராமாமிர்த ஐயர் ப்ளாட் பாரத்தில் அங்கும் இங்குமாக உலாவிக் கொண்டிருந்தார்.

அந்தச் சமயத்தில்தான் ஒரு திடுக்கிடும் செய்தி அவர் காதில் விழுந்தது.

நாகப்பட்டணத்திலிருந்து புறப்பட்ட ரயில்வண்டி வழியில் ஏதோ தண்டவாளத்தில் ஏற்பட்டிருந்த பிசகால் கவிழ்ந்து விட்டது என்னும் செய்திதான் அது. ராமாமிர்த ஐயர்



மனம் நிலை கொள்ளாமல் தவியாய்த் தவித்தது. அவரைப் போலப் பலபேர் மிகுந்த மனக் கலக்கத்துடன் ஸ்டேஷனில் மனம் புழுங்கினர். விபத்து நேர்ந்த இடத்துக்கு ரொம்பப் பேர் போனார்கள். ராமாமிர்த ஐயரும் போனார்.

ஆகா! அங்கேதான் என்ன பரிதாபக் காட்சி! ஏராளமான ஜனக் கூட்டம் சேர்ந்துவிட்டது. ரயில் அடியில் அகப்பட்டுக் கொண்டவர்களும், கையிழந்தவர்களும் கால் இழந்தவர்களும், மண்டை உடைந்தவர்களும், உருவமே தெரியாமல் நசுங்கிப் போனவர்களும். ஈனக் குரலில் கதறுகிறவர்களுமாக மேற்படி ரயில் பிரயாணிகள் கோரக் காட்சியளித்தனர்.

ராமாமிர்த ஐயர் இங்கும் அங்கும் ஓடியாடி மாப்பிள்ளையையும் சம்பந்திப் பேர்களையும் தேடினார். அச்சமயம் அதிகாரிகள் வந்து கூட்டத்தைக் கலைத்து, அடிபட்டு உயிருக்கு யமனோடு போராடும் பிரயாணிகளை 'ஆம்புலன்ஸி'ல் ஏற்றிப் பக்கத்து ஊரிலுள்ள ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைத்தார்கள். ராமாமிர்த ஐயர் ஒவ்வொரு ஆஸ்பத்திரியாகத் தேடினார். ஒரு பலனும் கிட்டவில்லை. நாகப்பட்டணத்தில் அவரது சம்பந்தி வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் இருக்கும் நண்பருக்கு 'ரிப்ளை தந்தி' கொடுத்து அவர்களைப் பற்றி விசாரித்தார். அதற்கு, அவர்கள் யாவரும் விபத்து நேர்ந்த அதே வண்டியில்தான் புறப்பட்டார்கள் என்ற விவரம் பதில் தந்தியில் கிடைத்தது.



வாசற்படியில் இருப்பவர்:—எங்கெல்லாமோ அலைந்து விட்டேன், இந்தப் பையனுக்கு அட்மிஷன் கிடைக்கவில்லை. தயவு செய்து நீங்களாவது இந்தப் பையனை உங்கள் பள்ளிக்கூடத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

உட்கார்ந்திருப்பவர்:—ஸார்! இது பள்ளிக்கூடம் இல்லை; எல்லோரும் எங்கள் வீட்டுக் குழந்தைகள்!

மனம் இடிந்துபோய் ராமாமிர்த ஐயர் ஊருக்கு வந்து சேர்ந்தார். அவர் புவனாவைத் தம் மடியில் தூக்கி வைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதார். புவனாவுக்கு ஒன்றும் புரியவில்லை. புவனாவின் தாயார் நோய்ப் படுக்கையிலிருந்தபடியே ஈனஸ்வரத்துடன், "சம்பந்தி வீட்டார் எல்லாம் எப்பொழுது வருவார்கள்? நீங்கள் மறுபடியும் நேரில் நாகப்பட்டணம் போய் அவர்களை அழைத்துக் கொண்டு வருவதற்குத்தான் போயிருக்கிறீர்கள் என்று நினைத்தேன். ஏன், என்ன சமாசாரம்?" என்று கேட்டாள்.

ராமாமிர்த ஐயர் மனைவியைப் பார்த்ததும் துக்கம் தாங்காமல் நாத் தழுதழுக்க நடந்ததையெல்லாம் சொன்னார்.

இதைக் கேட்டே அவர் மனைவிக்கு மூச்சே நின்றுவிடும்போல் ஆகிவிட்டது.

"ஐயோ! பாவி என்னுடைய ஆசைக்குப் பச்சைக் குழந்தை புவனாவைப் பலி கொடுத்து விட்டேனே?" என்று கதறி அழுது எழுந்திருக்க முயன்றாள். அவள் உடல் நிலை மிகவும் மோசமாக இருந்தபடியினால் அவளால் இந்த அதிர்ச்சியைத் தாங்க முடியவில்லை. அவ்வளவுதான் அவள் கதை முடிந்தது.

## 3

ராமாமிர்த ஐயர் தாயை இழந்த புவனாவை மிகவும் அன்புடன் வளர்த்து வந்தார். புவனா சங்கீதத்தில் தேர்ச்சி பெற்றாள்; ஸ்கூல் பைனல் பாஸ் செய்தாள். வயது பதினாலாயிற்று. பருவத்துக்கு ஏற்ற வனப்பு அவளிடம் குடி கொண்டது.

சௌந்தரிய தேவதையெனத் திகழும் புவனாவைக் காணும்போதெல்லாம் ராமாமிர்த ஐயருக்குத் துக்கம் தாங்க முடியாமல் வந்துவிடும்.

ஒரு நாள் புவனா தன் தகப்பனாரிடம் வந்து, "அப்பா, மாதர் சங்கம் ஒன்று ஆரம்பித்து, சிறு பெண்களுக்கும் ஸ்திரீகளுக்கும் சங்கீதம், எம்பிராய்டரி, தையல் வேலை முதலிய வித்தைகளையெல்லாம் சொல்லிக் கொடுக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. அது பெண் குலத்துக்குச் செய்யும் சேவை. அதோடு எனக்கும் பொழுது நல்லபடியாகச் செலவழியும். உங்கள் யோசனை என்ன, அப்பா?" என்று கேட்டாள்.

ராமாமிர்த ஐயருக்கு இதைக் கேட்டதும் மிகவும் சந்தோஷமாயிருந்தது.

"அம்மா புவனா, உன் யோசனை சிறந்த யோசனை. பேஷாக மாதர் சங்கம் ஆரம்பித்து நடத்து! நமது பங்களாவி



லேயே சங்க நடவடிக்கைகளை வைத்துக் கொள்ளலாம். அதற்காக என்னென்ன ஏற்பாடுகள் செய்ய வேண்டுமோ அவற்றை யெல்லாம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்!" என்று உற்சாகத்தோடு சொன்னார்.

மாதர் சங்கத்துக்கு வேண்டிய முன்னேற்பாடுகளெல்லாம் துரிதமாக நடந்தேறின. ஒரு நல்ல நாளில் சங்கம் ஆரம்பமாயிற்று. புவனாவின் முயற்சியினால் அநேக பெண்கள் அந்தச் சங்கத்தில் சேர்ந்தனர். தினமும் மாலை நான்கு மணியிலிருந்து ஏழு மணி வரையில் கல்வி, சங்கீதம், தையல், பாய் பின்னல், கூடை முடைதல் முதலிய வித்தைகளுக்கெல்லாம் பயிற்சி வகுப்புகள் ஒழுங்காக ஏற்படுத்தப் பட்டன. புவனா எல்லாவற்றையும் கவனித்து வந்தாள்.

வாரத்தில் சில நாள் பெண்களுக்கு உபயோகமான பல விஷயங்களைப் பற்றி மாதர் சங்கத்தில் உபந்யாசங்கள் நடந்தன. புவனாவே அந்த உபந்யாசங்களை நடத்தி வந்தாள்.

மாதர்கள் முன்னேற்றத்தில் மிகவும் ஆர்வம் கொண்ட வடநாட்டுப் பிரமுகர் அமர்நாத் என்பவரைப் பற்றி ராமாமிர்த ஐயர் கேள்விப் பட்டுத் தங்கள் சங்கத்தின் ஆண்டு விழாவுக்கு வரவழைத்தார்.

மாதர் சங்கத்தில் அமர்நாத் அற்புதமாகப் பேசினார். எல்லோரையும் தம் பேச்சுத் திறமையினால் அப்படியே கவர்ந்து விட்டார். சமூகத் தொண்டில் புவனாவுக்கு உள்ள ஆர்வத்தை மிகவும் பாராட்டிப் பேசினார்.

கூட்டம் கலைந்த பிறகு அமர்நாத், புவனா, ராமாமிர்த ஐயர் யாவரும் வீட்டுக்கு வந்தனர். ஆடம்பரமான விருந்து சாப்பாட்டிற்குப் பிறகு கொஞ்ச நேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்து விட்டுப் படுக்கைக்குச் சென்றனர். அமர்நாத்துக்கு என்று விடப்பட்டிருந்த அறையில் அவர் படுத்துக் கொண்டார்.

புவனாவும் தன் அறையில் படுத்துக் கொண்டாள். என்ன முயற்சி செய்தும் அவளுக்குத் தூக்கம் வருகிற வழியாயில்லை. தூக்கம் வராததற்குக் காரணம் அமர்நாத் அவள் இருதயத்தில் புகுந்து கொண்டதுதான்!

"இது என்ன! அமர்நாத் என் மனதில் குடிகொண்டு விட்டாரே! ஏன் என் மனம் இன்று இப்படி நிலை கொள்ளாமல் தவிக்கிறது!" என்று எண்ணி அவள் மனம் புழுங்கினாள்.

ராமாமிர்த ஐயருக்கும் அன்று என்னவோ தூக்கம் பிடிக்கவில்லை. எழுந்து அங்கும் இங்கும் உலாவினார். புவனா தூங்காமல் எழுந்து உட்கார்ந்து கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவர் மனம் வருந்திற்று. அமர்நாத்தின் அறைக்கு அருகில்

சென்று பார்த்தார் ராமாமிர்த ஐயர். அமர்நாத்தும் தூக்கம் வராமல் நாற்காலியில் உட்கார்ந்து யோசனையில் ஆழ்ந்திருந்தார். "என்ன மிஸ்டர் அமர்நாத்! தூங்கவில்லையா?" என்று கேட்டார் ராமாமிர்த ஐயர்.

அமர்நாத் "வாருங்கள்! என்னமோ, தூக்கமே வரவில்லை" என்றார்.

"அமர்நாத்! உங்களுக்கு விவாகமாகி விட்டதா?" என்று கேட்டார் ராமாமிர்த ஐயர். அவர் குரல் ஏதோ ஒரு தீர்மானத்துக்கு அவர் வந்து விட்டதை நன்கு வெளிப்படுத்தியது.

உடனே அமர்நாத்தின் முகத்தில் ஒரு வறண்ட புன்னகை மலர்ந்து மறைந்தது.

"ஏன்? ஒரு வேளை உங்கள்...... பெண்ணை......எனக்கு....எனக்கு......ஏற்கெனவே விவாகம் ஆகியிருக்கிறது. என் கதை விசித்திரமானது..." என்று கூறிப் பெருமூச்சு விட்டார் அமர்நாத்.

"அந்தக் கதையைக் கொஞ்சம் சொல்லுங்களேன், உங்களுக்கு ஆக்ஷேபணையில்லை என்றால்! எனக்கும் தூக்கம் வரவில்லை!" என்றார் ராமாமிர்த ஐயர்.

அமர்நாத் ஆரம்பித்தார்:

"எனக்கு விவாகமானது சரியாக நினைவுக்கு வரவில்லை. தகப்பனார், தாயார், நான் ஆகிய மூவரும் ஏதோ பண்டிகைக்காக என் மாமனார் ஊருக்குப் போய்க் கொண்டிருக்கும் போது ரயில் கவிழ்ந்து விட்டது எனக்கு நினைவு இருக்கிறது. நான் கண் விழித்துப் பார்த்த போது ஒரு வடநாட்டு ஸ்திரீ எனக்கு ஆறுதல் சொன்னாள். அந்த அம்மாள் விபத்தில் அடிபட்டவர்களுக்கு ஆஸ்பத்திரியில் சிகிச்சை செய்வதற்கு நிறையப் பணத்துடன் வந்தாளாம்; திக்கற்ற என்னிடம் அவளுக்கு ஒரு அபிமானம் விழுந்தது. அவளுடன் வடநாட்டுக்குச் சென்றேன். அவள் தன் சொந்த மகனைப் போலவே என்னை ஆதரித்து வருகிறாள். என் கலாசாலைப் படிப்பும் வடநாட்டிலேயே முடிந்து விட்டது.

"நான் அடிபட்டு நினைவின்றிக் கிடக்கும் போது என் சட்டைப் பையில் ஒரு போட்டோ இருந்ததாம். அதில் கல்யாண கோலத்துடன் நானும் என் மனைவியும் இருக்கிறோம். பேரோ ஊரோ தெரியவில்லை. விழுந்த அதிர்ச்சியினால் பழைய சம்பவங்கள் சரியாக ஞாபகம் இல்லை என்று டாக்டர் சொன்னார்" என்று அமர்நாத் சொல்லி முடித்ததும் எழுந்து தம் சட்டைப் பையிலிருந்து அந்தப் போட்டோவை எடுத்து வந்து ராமாமிர்த ஐயரின் கையில் கொடுத்தார்.

ராமாமிர்த ஐயர் அதைக் கையில் வாங்கிப் பார்த்தார். "புவனா அதிர்ஷ்டசாலி!" என்று பைத்தியம் பிடித்தவர் மாதிரி கத்தினார். ஆனந்தக் கூத்தாடினார். அவரால் மேலே பேசமுடியவில்லை.

சத்தத்தைக் கேட்ட புவனா அந்த அறைக்கு வந்து "அப்பா, என்ன சமாசாரம்?" என்று கேட்டாள்.

ராமாமிர்த ஐயர் தாங்க முடியாத சந்தோஷத்துடன் "புவனா, உன் கணவர் பிரபாகரன் அமர்நாத்தாக வந்து நம்மை ஆட்கொண்டார்!" என்று சொல்லி, புவனாவின் கைகளைப் பிடித்து அமர்நாத்தின் கரங்களில் வைத்து மனம் மகிழ்ந்தார்.

அமர்நாத்தும் புவனாவும் ஆனந்தக் கடலில் ஆழ்ந்தனர்.



நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் நிறுவிய இந்திய தேசிய இராணுவத்தில் தொண்டு புரிந்தவரும் தற்போது நியூ பம்பாய் டிரான்ஸ்போர்ட் கம்பெனி மானேஜருமான லெப்டினன்ட் எம். பாலகிருஷ்ணன் அவர்களுக்கும், கோலாலம்பூர் ரப்பர் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட்டைச் சேர்ந்த ஸ்ரீ எம். கே. நம்பியாரின் புதல்வி ஸ்ரீமதி ஸரோஜினி தேவிக்கும் சென்ற ஜூன் மீ 4வ. மலையாளத்தைச் சேர்ந்த அழிக்கோடில் திருமணம் விமரிசையாக நடந்தது. திருமணத்துக்கு நண்பர்கள் திரளாக விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினர்.

# கம்பர் தரும் காட்சி

**டி. கே. சி.**

## 299. எங்களைக் குறித்து வருந்த வேண்டாம்!

கும்பகர்ணன் விபீஷணனைப் பார்த்தவுடன் 'இவனும் நம்மோடு யுத்தத்தில் மாண்டு போவான்போல் இருக்கிறதே' என்று வருந்தினான்.

அடுத்தாற்போல்த் தம்பியின் மேல் ஏற்பட்ட பரிவு ஒதுங்கிற்று. உடனே அண்ணன் ராவணன் மீது பரிவு உண்டாயிற்று. 'எமனுடைய உலகத்தில் தனியாகவா கட்டுண்டு நடந்து போவான்' என்று மிகவும் வருந்தினான்.

* * *

உடனே மறுபடியும் தம்பி விபீஷணன் மேல் இரக்கம் உண்டாய் விடுகிறது. மிக்க ஆத்திரத்தோடு பேசுகிறான் :

"ஒரு விநாடிகூட இங்கே தாமசிக்கக் கூடாது."

'தாழ்க்கிற்பாய் அல்லை; என் சொல்த்
  தலைக்கொளத் தக்கதென்று
கேட்கிற்பாய் ஆயின், எய்தி
  அவரொடும் கெழீஇய நட்பை
வேட்கிற்பாய்! இனியோர்மாற்றம்
  விளம்பினுல் விளைவுண்டென்று
சூழ்க்கிற்பாய் அல்லை! யாரும்
  தொழுகிற்பாய்' என்னச்சொன்னான்.

[தாழ்க்கிற்பாய் அல்லை: தாமசம் செய்வது என்பது கூடாது: என் சொல் தலைக் கொளத் தக்கதென்று கேட்கிற்பாய் ஆயின்: என் சொல்லை அங்கீகரிக்கத் தக்கதென்று கருதி அதன்படி நடக்க நீ தயாராய் இருக்கிறாய் என்றால்; எய்தி அவரொடும் கெழீஇய நட்பை வேட்கிற்பாய்: ராம லக்ஷ்மணர்கள் பால் போய் அவர்களுடைய நெருங்கிய நட்பை வேண்டிக் கொள்வாயாக; இனி ஓர் மாற்றம் விளம்பினால்: இன்னமும் நீ பேசி என்னைத் திருப்பலாம் என்று எண்ணினால்; விளைவு உண்டென்று சூழ்க்கிற்பாய் அல்லை: பிரயோசனம் உண்டென்று கருத வேண்டாம் ; யாரும் தொழுகிற்பாய்: எவ்வளவு மேம்பட்டவராய் இருந்தாலும் அவர்களும் தொழத் தகுந்த பெரியவன் நீ ; என்னச் சொன்னான்: என்று ஆர்வத்தோடு சொன்னான் கும்பகர்ணன்.]

மேலும் சமாதானம் சொல்லுகிறான் அந்தக் கும்பகர்ணன்.

'ஆகுவ(து) ஆகுங்கா லத்(து)
  ஆகுமாம்; அழிந்துசிந் திப்
போகுவ(து) அயலேநின் று
  போற்றினும் போதல்செய் யும்:
சேகற உணர்ந்தோர்நின் னின்
  யாருளர்! வருந்தல்செய் யா(து)
ஏகுதி! எம்மைநோக் கி
  இரங்கலை, என்றும்உன் னாய்!'

[ஆகுவது ஆகும்காலத்து ஆகும்: தன்மை ஏற்படுவது என்றால் அதற்குரிய காலத்தில் ஏற்பட்டே தீரும், ஆனால்; அழிந்து சிந்திப் போகுவது: அழிந்து சிதறுண்டு நிர்மூலமாய்ப் போகிற காரியம்; அயலே நின்று போற்றினும் போதல் செய்யும்: பக்கத்தில் சதா நின்று ஸர்வ ஜாக்கிரதையாகப் பாது காத்த போதிலும் அழிந்து போய்விடத்தான் செய்யும்: சேகு அற உணர்ந்தோர் நின்னின் யாருளர்: குறை வைக்காது விஷயங்களைத் தெளிவாக உணர்ந்து வைத்தவர்கள் உன்னைப் போல் உலகத்தில் வேறு யார் இருக்கிறார்கள்,—ஆகையால்; வருந்தல் செய்யாது ஏகுதி: மனசில் வருத்தம் வைத்துக் கொள்ளாத படிக்கு ராமனிடம் போக வேண்டும் நீ: எம்மை நோக்கி இரங்கலை: என்னையோ அண்ணன் ராவணனையோ எண்ணிக்கொண்டு மனம் தளரவேண்டாம்; என்றும் உன்னாய்: என்றென்றும் உன் புகழ் நிற்கும் அதனால் சிரஞ்சீவிதான் நீ. அப்பனே! மனதில் வருத்தம் கொள்ளாதே.]

விபீஷணனுடைய லக்ஷ்ய நிலை மிக உயர்ந்த நிலை யென்று அங்கீகரிக்கிறான் கும்பகர்ணன்.

உணர்ச்சி உடைய வீரனது உள்ளம் இத்தகைய சந்தர்ப்பங்களில் மனுஷவர்க்கம் மேம்படுவதற்கான லக்ஷ்யங்களிலே நாட்டம் கொள்ளும் என்பது சரித்திரத்தில்க் காணுகிற உண்மைதான்.

இரண்டு கவிகளும் அற்புதமான கவிகள். அற்புதமாய் விளக்குகின்றன பாத்திரங்களை.

# அவள் யார்?

ஸோமாஸ்

தேவராஜன் நல்ல பணக்கார வாலிபன். பணம், இளமை, எல்லாம் அவனிடம் சேர்ந்திருந்தபடியினால் ஒரு கவர்ச்சியும் இருந்தது. அவனுக்கு நண்பர்கள் கிடைக்க வேண்டும் என்றால் என்ன சிரமம் இருக்கப் போகிறது? எத்தனையோ இளைஞர்கள் அவன் நட்பைப் பெற விரும்பி ஏங்கினர்.

ஆனால் தேவராஜன் யாருடைய நட்பையும் பொருட்படுத்தவில்லை. அதற்காக அவன் யாரையும் அலக்ஷ்யம் செய்யவும் இல்லை. அவன் மனிதர்களோடு நட்புக் கொள்ளுவதைவிடப் பறவைகளோடும் மிருகங்களோடும் நட்புக் கொள்ளுவதைப் பெரிதும் விரும்பினான்.

அவன் வீட்டில் கிளிப்பிள்ளையும் நாயும் மயிலும் பூனையும் நிறைய இருந்தன.

ஆனால் தேவராஜன் மிகவும் பிரேமையுடன் எப்பொழுதும் இணைபிரியாமல் இருந்தது ஒரே ஒரு நண்பனிடம்தான். அந்த நண்பன் ஒரு கிளி.

அந்தக் கிளி, தேவராஜன் கோயிலுக்குப் போனால் அவன் தோளில் உட்கார்ந்து கொண்டு போகும்; தேவராஜன் பேப்பர் படித்தால் அவன் அருமைக் கிளியும் அவன் கையில் அமர்ந்து பேப்பர் பார்க்கும்; தேவராஜன் யாராவது நண்பரோடு பேசினால் அவனது அழகுக் கிளி அருகில் அமர்ந்து கொண்டிருக்கும்; அவன் யாருடனாவது சண்டைக்குப் போனால் அந்த வண்ணக் கிளி தன் சிறகுகளை அடித்துக் கொண்டு தானும் சண்டைக்குப் போகும்; அவன் சாப்பிடப் போனால் அதுவும் கூடப் போய் அவன் சாப்பிட்டு முடிகிறவரையில் அவனுடன் பேசிக் கொண்டிருக்கும்.

இப்படியாகப் பச்சைக் கிளியும் தேவராஜனும் ஊரே அதிசயப்படும்படி இணை பிரியாத நண்பர்களாயிருந்தனர்.

ஒருசமயம் தேவராஜன் குற்றாலத்துக்கு உல்லாசப் பிரயாணம் போய் அங்கே சில நாள் தங்கினான். அவனுடன் அவனது கிளியும் போயிற்று என்று சொல்ல வேண்டியதில்லை.

இயற்கை விநோதங்களைப் பார்த்து ரஸித்த வண்ணம் தேவராஜன் ஜனசந்தடியில்லாத ஒரு மலைப் பிரதேசத்தில் உட்கார்ந்திருந்தான். எங்கேயோ போயிருந்த கிளி கொஞ்ச நேரம் கழித்து ரொம்ப வேகமாகப் பறந்து வந்து தேவராஜன் தோளில் அமர்ந்தது.

தேவராஜன் அதைக் கையில் எடுத்து அன்போடு தடவிக் கொடுத்தான்.

கிளி அவனை ஆச்சரியத்துடன் விழித்துப் பார்த்து, "தேவராஜா, நீ பார்த்தால் மயங்கிப் போய் விடுவாய். ரொம்பப் பிரமாதம்!" என்று கூறியது.

தேவராஜன் வியப்புடன் "என்ன அப்படிப் பிரமாதமாகக் கண்டு விட்டாய்?" என்று கேட்டான்.

கிளி அவன் காதருகில் வந்து "ஒரு அழகான பெண்! ரம்பையும் ஊர்வசியும் கூட அவள் அழகுக்கு இணையாக மாட்டார்கள்" என்று சொல்லி விட்டுப் பறந்தோடி விட்டது.

தேவராஜன் திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தான்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு கிளி மீண்டும் அவனிடம் வந்தது. "ஆகா! அவள் பார்வைக்குத்தான் என்ன சக்தி!" என்று கூறி விட்டு வானவீதியில் தாவி மறைந்து விட்டது.

தேவராஜன் மனம், 'யார் அந்தப் பெண்மணி?' என்று கேட்கத் தொடங்கியது.

மறுபடியும் வந்தது கிளி. "தேவராஜா, அடடா! அவளிடம்தான் என்ன தளுக்கு!" என்று கூறியது. ஆனால் இந்தத் தடவை தேவராஜன் சும்மா இருந்துவிடவில்லை. கிளியைப் பறக்க விடாமல் பிடித்துக் கொண்டான்.

"நானும் அவளைப் பார்க்க வேண்டும். அவள் எங்கே இருக்கிறாள்? காட்டு, பார்க்கலாம்" என்றான்.

"சத்தம் போடாமல் என்னுடன் வா, நான் காட்டுகிறேன்!" என்று சொல்லி விட்டு அவனுக்கு முன்னால் பறந்து சென்றது. கொஞ்சதூரம் போனதும் கிளி அவன் கையில் உட்கார்ந்து, "தேவராஜா, அதோ அங்கே பார், அந்தப் பாறைக்கு அருகில் உள்ள மரக்கிளையில்!" என்று காட்டியது. தேவராஜன் கூர்மையாகப் பார்த்தான். உடனே அவனுக்குச் சிரிப்பு தாங்கவில்லை; கட கட வென்று சிரித்தான்.

அந்த மரக்கிளையில் உட்கார்ந்திருந்தது வேறு யாருமில்லை. அது ஓர் அழகான பெண் கிளி. தேவராஜனுக்குச் சிரிப்பு வராமல் என்ன செய்யும்!

# நரிக்காட்டு ராஜா

ஆசிரியர்: எஸ். கோபாலன் மொழிபெயர்ப்பு: எஸ். வி. எஸ்.

## 19. காப்பாற்றுங்கள்!

**ம**று நாள் இரவு. மாதவன் நரிகளிடம் ஓடிப் போகும் நேரம் வந்தது.

அவர் ஒருபுறம் நரிகளிடம் போய்விட வேண்டும் என்ற ஆவலில் துடித்துக் கொண்டிருந்தார். மற்றொருபுறம் போகக் கூடாது என்றும் அவர் உள் மனசு சொல்லிக்கொண்டிருந்தது. ஆக இந்த இரு உணர்ச்சிகளும் ஒன்றுடன் ஒன்று போராடிக் கொண்டிருந்தன.

ஆம், நரிகளுடன் அவர் கொண்டிருந்த கூட்டுறவின் காரணமாக இல்லற வாழ்க்கை பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது. அவர் தம் மனைவியுடன் பழையபடி தொடர்பு கொள்ள இயலவில்லை. ஆகவே, தம் 'நரி உணர்ச்சி'யுடன் அவர் தீவிரமாகப் போராட வேண்டியிருந்தது. நரிகளைப் பொருட்படுத்தாது வீட்டிலேயே இருந்து விடுவது முதலில் சுலபமான காரியமாகத்தான் தோன்றியது. ஆனால் அந்த வேளையில் அவை ஊளையிட்டு அவரை அழைக்கத் தொடங்கவே, ஏதோ ஒரு மந்திர சக்திக்கு வசப்பட்டவர் போலாகி விட்டார்.

ஆனாலும் அன்றிரவு அவர் வெற்றியடைந்து விட்டார். நரிகளின் 'ஊ ஊ'ச் சத்தம் செவிடன் காதில் சங்கு ஊதியதாக முடிந்தது. பிடிவாதமாகக் காதுகளைப் பொத்திக்கொண்டு போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்திருந்தார். ஒரு கணம், அவருக்குத் தம் திடசங்கல்பம் எல்லாம் விட்டெறிந்து விட்டு நரிகளிடம் ஓடி விடலாமா என்று தோன்றியது. ஆயினும் அடுத்த கணம் சமாளித்துக் கொண்டார். மறுபடியும் மனதை உறுதிப்படுத்திக் கொண்டார். அன்றிரவு தாம் நரிகளிடம் போகவில்லை என்பதைப் பொழுது விடிந்ததும் மனைவி அறிந்தால் எவ்வளவு சந்தோஷப்படுவாள். எப்படி நன்றி செலுத்துவாள்! அவள் முகத்தில் எத்தகைய இன்பப் புன்னகை எழும்! இந்தச் சிரமத்துக்கு இதைவிட உயர்ந்த பரிசுதான் இருக்க முடியுமா என்றெல்லாம் நினைத்துப் பார்த்துக் கொண்டார்.

இவ்வித எண்ணங்களுக்குப் பிறகு மாதவன் நிம்மதியாகத் தூங்கினார். அந்த மனப் போராட்டத்தில் அவருக்கு ஏற்பட்ட அலுப்பு இவ்வளவு அவ்வளவு அல்ல. சூரியோதயமாகி நன்றாக வெளிச்சம் வந்த பிறகும் அவர் தூங்கியிருப்பார். ஆனால் பொழுது விடிவதற்கு இன்னும் ஒரு மணி நேரம் இருக்கும் என்னும் போதே, திடீர் என்று விழித்துக் கொண்டார். அவர் திடீர் என்று விழித்துக் கொண்டதற்குக் காரணம் கிட்டுவின் அலறல் சத்தம்தான்.

படுக்கையில் எழுந்து உட்கார்ந்த வண்ணம் மாதவன் தம் மனைவியைக் கூப்பிட்டார். கட்டிலின் ஓரத்தில் உட்கார்ந்திருந்த கிட்டு தன் தாயார் 'ஓடிப் போய் விட்டாள்' என்பதை இரைந்து தெரிவித்தான்.

இதைக் கேட்டதும் மாதவனுக்கு உண்மை புலப்படத் தொடங்கியது.

உண்மையிலேயே அவள் அவரை விட்டு ஓடிப்போய் விட்டாள். கணவனை மட்டும் விட்டு விட்டு ஓடவில்லை. அந்தக் கல்நெஞ்சக்காரி, தன் அருமை மகனையும் துறந்து விட்டு ஓடி விட்டாள்.

இவ்விஷயம் அவருக்குச் சொல்லொணாத் துயரத்தைத் தந்தது. இந்தத் துயரத்திலும், அவள் ஓடிப் போனதற்குக் காரணம் தாமே என்பதை உணரக்கூடிய அளவுக்கு நேர்மையிருந்தது! ஆக, அவளிடம் ஒருபுறம் ஏற்பட்ட அனுதாபமும் மற்றொரு புறம் ஏற்பட்ட கோபமும் ஒன்றுடன் ஒன்று போராடின. கொடுமைப் படுத்தும் கெட்ட கணவனாக இருந்தால், அவனை ஒரு பெண் சகித்துக் கொள்வாள். ஆம், கணவனிடமுள்ள கொடுமையைச் சகிக்க முடியும். ஆனால், அந்தக் கணவனிடமுள்ள நரிகளை எப்படிச் சகித்துக் கொள்வது? ஆகவே, தம்மைக் கண்டு பீதியுற்றதில் நியாயமிருப்பினும், தாம் நல்ல வழிக்குத் திருந்துவதற்கு அவள் அவகாசம் கொடுத்திருக்க வேண்டும் என்று எண்ணினார். கிட்டுவின் காரணமாகவாவது ஓடிப் போகாது நின்றிருக்கக் கூடாதா என்று நினைத்தார்.

''அம்மா, சேலையைப் பிடித்து இழுத்தேன், அப்பா! 'போகாதே' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டேன், அப்பா! அவள் போகும்போது, நானும் கூடவே மாடிப்படி இறங்கிப் போனேன், அப்பா! ஆனால் அவள் என்னை உள்ளே பிடித்துத் தள்ளிவிட்டுக் கதவைச் சாத்திக்கொண்டு போய் விட்டாள்'' என்று அழுது கொண்டே கூறினான் கிட்டு.



மாதவன் கண்களிலும் கண்ணீர் வந்து விட்டது. கிட்டுவைத் தோளில் தூக்கிக் கொண்டு கட்டிப் பிடித்துக் கொண்டார்.

"அம்மா வேறு ஒன்றும் சொல்ல வில்லையா? எங்கே போகிறாள் என்ற தகவலும் சொல்லவில்லையா?" என்றார்.

"'நரிகள் சத்தம் வருவதற்குமுன் நான் போய் விடுகிறேன். கிட்டு உன்னை விட்டு விட்டுப் போகிறேன். பின்னால் எப்போ தாகிலும் சந்தர்ப்பப் பட்டால் பார்க் கிறேன்' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டாள், அப்பா" என்றான் கிட்டு.

'எவ்வளவு இரக்கமற்ற கல்நெஞ்சம்!' என்று விம்மினார் மாதவன்.

இவ்விதம் தந்தையும் மகனும் விம்மி அழுது கொண்டிருந்தபோது கீழே ஏதோ சத்தம் கேட்டது. கதவு தட்டும் சத்தம். மாதவன் வெகு வேகமாகக் கீழே இறங் கிப் போய்க் கதவைத் திறந்தார். திறந் ததும் வண்டிக்காரன் நின்று கொண் டிருந்ததைப் பார்த்தார். நிலா வெளிச் சத்தில் அவன் உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை நடுங்கிக் கொண்டிருந் தான். அவனிடம் ஏதோ சொல்ல வாய் எடுத்தார். அதற்குள் மாதவி ஓடிவந்து அவரைக் கட்டிக் கொண்டாள்.

"என்னை நரிகளிடமிருந்து காப்பாற் றுங்கள். உங்களை விட்டு நான் எங்கும் போகிறதில்லை. சத்தியம் செய்கிறேன் போகவில்லை என்று. தயவுசெய்து என் மேல் அந்த நரிகளை ஏவாதீர்கள். உங்க ளுக்கு ரொம்பவும் புண்ணியமுண்டு" என்று அலறினாள் மாதவி.

அவள் ஆறுதலடைய முதுகில் மாதவன் தட்டிக் கொடுத்து, மாடிக்கு அழைத்துச் சென்றார். அங்கேயும் நரிகள் தொடர்ந்து வந்து விடுமோ என்று ரொம்பவும் பயந் தாள். "மாடிப்படிகள் ஏறி நரிகள் வராது. நீ சற்று ஓய்வு எடுத்துக் கொள்" என்று நூறு தடவை கூறிய பிறகுதான் சற்று ஓய்வெடுத்துக் கொண்டாள். பின்னர், அவரை விட்டுச் சென்றபின் அவளுக்கு நேர்ந்தவற்றை யெல்லாம் விரிவாகக் கூறினாள்.

அவரை விட்டுவிட்டு ஓடத் துணிந்தது கொடிய செய்கை என்பதை முதலில் அவள் ஒப்புக் கொண்டாள். ஆனால் கூடவே, அன்று மாதவன் தம்மைப் பற்றிக் கூறியவற்றைக் கேட்டு ஒரேயடி யாக நடுங்கி விட்டாளாம். அதன் காரண மாகத்தான் அவரை விட்டுவிட்டு ஓடி விடத் தீர்மானித்தாளாம்.

வண்டிக்காரனுக்கு முன் கூட்டியே பணம் கொடுத்து, குறித்த நேரத்துக்கு வீட்டு வாசலில் வண்டி கொண்டு வர ஏற்பாடு செய்து கொண்டாள். ஆனால் புறப்படும் நேரத்தில் கிட்டு விழித்துக் கொண்டு விட்டான். அவளுடைய ஏற் பாடுகள், திட்டங்கள் எல்லாம் குலையும்

தருவாயிலிருந்தன. எப்படியோ அவனிடமிருந்து தப்பித்துக் கொண்டு வண்டியில் ஏறினன். எருதுகள் ஐந்து மைல் தூரத்திலிருந்த ரயில்வே ஸ்டேஷனை நோக்கி ஓடின. அப்படி ஓடிய வண்டி அரை மைல்கூடச் சென்றிராது, அதற்குள் நரிகள் வண்டியைச் சூழ்ந்து கொண்டன. கொஞ்ச நேரத்தில் வண்டி நகரவொட்டாமல் செய்துவிட்டன. நரிகள் எருதுகளைத் திட்டம் வகுத்துத் தாக்கின. இந்த இடைஞ்சலை அவன் அலட்சியமாகக் கருதினன். அவனிடமிருந்து சாட்டையை வாங்கிக்கொண்டு வண்டியை விட்டுக் கீழே குதித்தான். ஆம், ரயில்வே ஸ்டேஷனுக்கு எப்படியாகிலும் போய்த் தப்பி ஓடிவிட வேண்டும் என்ற ஆத்திரத்தில் அவன் தனக்கு நரிகளால் நேரக் கூடிய இடையூறைப் பற்றிச் சற்றும் நினைக்கவே யில்லை.

மாதவி தைரியமாகக் கையில் சாட்டையை வைத்துக்கொண்டு வீசினன். நரிகள் சாட்டைக்கு எப்படியோ தப்பி, பின்புறமாக அவனை நெருங்கி வந்தன. வெகு சீக்கிரத்தில் அவன் சுமார் ஆயிரம் தேர்ந்த நரிகளுடன் போரிட வேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டான். நரிகள் ஒரு ஐக்கிய முன்னணி வகுத்துச் சண்டை யிட்டன. கடைசியில் அவன் எந்தப் புறமும் ஓடமுடியாது என்பதைக் கண்டான். இப்போது அவனுக்கு ஒரே நடுக்கமாகப் போய்விட்டது. அதில் நரிகள், எருதுகளைத் தொந்தரவு செய்வதை விட்டுவிட்டன என்பதைக் கண்டான். அவை யாவும் அவனையே குறிக்கோளாகக் கொண்டன என்பதையும் கண்டு கொண்டான். அத்தனை நரிகளும் அவன் கால்களுக்குப் பக்கத்தில் வந்து நின்று சூழ்ந்துகொண்டன என்றாலும் ஒரு நரியாகிலும் அவனுக்கு எத்தகைய தீங்கும் விளைவிக்கவில்லை. எனினும் இந்தச் சூழ்நிலையில் மன நிம்மதியுடன் அவனால் எப்படி இருக்க முடியும்? மாதவி, நரிகளின் இந்தப் பலாத்கார அன்பிலிருந்து தப்ப நினைத்தது இயல்புதானே? ஆனல் அவனுக்கு நரிகளிடமிருந்து தப்புவது முடியாத காரியமாகப் போய் விட்டது. இவ்விஷயம் சுமார் ஐம்பது நரிகள், வால்களைப் பின்னிக்கொண்டு சேர்ந்து நின்று, அவனை அழுத்தியபோது தெரிந்தது. நெருக்கமாக நின்ற நரிகளின் முதுகுகள் சேர்ந்து விசாலமான ஆசனமாக அமைந்தன. அவனுக்குப் பயம் அதிகரித்து விட்டது. கண்களை இறுக மூடிக் கொண்டான். நெருக்கமாக நின்ற நரிகள் அவனுடைய கால்களைத் தட்டிக் கீழே விழச் செய்து அவனைத் தம் முதுகின்மீது ஏந்திக் கொண்டன.

அவனுக்கு ஒரு மெத்தையில் கிடப்பதுபோல் தோன்றியது. அடுத்த கணம் அவன் எடுத்துச் செல்லப்பட்டான். அவை சற்று நேரம் கழித்து ஓரிடத்தில் நின்றன. அதுவரை அவன் மூடிய கண்களைத் திறக்கவேயில்லை; இப்போதுதான் திறந்தான். பார்த்தால் தன் வீடு. ஆனல் அதற்குள் வண்டிக்காரன் யஜமானரிடம் தகவல் சொல்ல வீட்டுக்கு வேகமாக ஓடி வந்து கதவிடித் திருக்கிருன். அந்தச் சத்தத்தைத்தான் தந்தையும் மகனும் அப்போது கேட்டு விட்டுக் கீழே இறங்கி வந்தார்கள்.

இவ்வளவும் சொல்லி விட்டு மாதவி, "நான் உங்களை இனி விட்டுப் பிரிய மாட்டேன். நான் செய்த காரியம் ரொம்பவும் கொடுமையானதுதான். ஆயினும், என்மீது அந்த நரிகளை ஏவாதீர்கள்! உங்களுக்குப் புண்ணியமுண்டு" என்று அழுது கொண்டே கூறினள்.

## 20. கிட்டு எங்கே?

பிரிந்துபோன சதிபதிகள் மறுபடியும் சேர்ந்து கொண்டதில் அடைந்த சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல. அந்தச் சந்தோஷத்தில் அவர்கள் கிட்டுவை மறந்தே போனர்கள்.

கிழக்கு வெளுக்கும் வைகறைப் பொழுதில்தான் அவர்களுக்குக் கிட்டுவின் நினைவு வந்தது. படுக்கையில் போய்ப் பார்த்ததில் அவன் இல்லை.

வேலைக்காரன் ஓடிவந்து, 'கிட்டு எங்கும் காணப்படவில்லை' என்று சொல்லியபோது மாதவன் அதை ஒரு பெரிய விஷயமாகக் கருதவில்லை.

ஆனல் மாதவி வீடு முழுவதும் தேடினள். அக்கம் பக்கங்களில் தேடினள். கிட்டு இல்லை என்று தெரிந்ததும் "அந்தத் துஷ்ட நரிகள்தான் கிட்டுவைத் தூக்கிக் கொண்டு போயிருக்க வேண்டும்" என்றாள். இதைக் கேட்டதும்தான் மாதவன் 'அப்படியும் ஒருவேளை நடந்திருக்கலாமோ' என்று உண்மையிலேயே கவலை கொள்ள ஆரம்பித்தார்.

கிட்டுவுக்குத் தனியே வெளியே போகும் வழக்கம் கிடையாது. ஏன், அவன் ஒரு வீட்டுப் புழு. வீட்டை விட்டு எங்கேயும் போகமாட்டான். அப்படிப் போனலும் அப்பா, அம்மா இன்றிப் போகமாட்டான். அப்படிப்பட்டவன் இன்று காணவில்லை என்றால், ஒருவேளை நரிகள்தான் தூக்கிச் சென்றிருக்குமோ? என்று மாதவனும் சந்தேகப்பட்டார். ஆனல் மாதவியின் இந்தப் பயம் மாதவனை அதிக வேதனைக்கு உள்ளாக்கியது. ஆம்; மறுபடியும் மாதவி

தன்னை விட்டு ஓடிவிடுவாளோ என்று பயந்தார். நீங்களே சொல்லுங்கள், எந்தப் பெண், கணவனிடமும், மகனிடமுமுள்ள இவ்விசித்திர 'நரிமோகத்'தைச் சகித்துக் கொண்டு வாழ்க்கை நடத்த முடியும்?

இவ்வித எண்ணங்களில் அலைப்புண்ட மாதவன் ஒரு வார்த்தை பேசாமல் கையில் தடி எடுத்துக்கொண்டு வெளியே போகப் புறப்பட்டார். மாதவி தானும் உடன் வருவதாகக் கூறினாள்.

கிட்டுவைத் தேடுவதற்காகத் தானும் வருவதாக அவள் கூறவில்லை. நரிகளிடம் அவளுக்கு ஏற்பட்ட இந்தப் புது அனுபவத்திற்குப் பிறகு வீட்டில் தனியாக இருக்க அவளுக்குப் பயமாக இருந்தது. அதனால் தான் மாதவனுடன் தானும் வருவதாகக் கூறினாள்.

"வேண்டாம்; அவசியமில்லை. கிட்டு பக்கத்துத் தெருவில் எங்கேயாகிலும் இருப்பான். நானே போய்த் தேடி அழைத்து வந்து விடுகிறேன். நீ அதற்குள் கொஞ்சம் காப்பி போட்டு சாப்பிட்டு, ஓய்வு எடுத்துக்கொள்" என்று கூறிவிட்டுப் போனார்.

• • •

கிட்டு அங்கே எங்கும், அக்கம் பக்கத்துத் தெருக்களில் காணவில்லை. ஆகவே, நரிகளிடம்தான் இருப்பான் என்ற எண்ணத்தில் மாதவன் தமக்கு நன்கு பரிச்சயமான பனங்காட்டை நோக்கிப் போனார். வெகு வேகமாக நடந்தார். அப்போது நரிகளிடம் அவர் இத்தனை நாள் கொண்டிருந்த சிநேக பாவம் வேகமாகக் கரைந்துகொண்டு வந்தது. தம் மனைவிக்காக முதல் நாளிரவெல்லாம், நரிகளிடம் கொண்டிருந்த சிநேக பாவத்துடன் போராட வேண்டியிருந்தது. ஆனால் இன்றோ அந்தச் சிநேக உணர்ச்சி, அந்த பந்தம், அவிழ்ந்து வருவதாகத் தோன்றியது. தம் மனைவி, தம்மிடம் அலுப்படைந்து ஓடிப்போகும் அளவுக்குத் தாம் இந்த நரிகளிடம் உறவு கொண்டாடிக் காலத்தை வீணாக்கி வந்ததைப் பற்றி நினைத்தபோது அவருக்கு வருத்தம் உண்டாயிற்று.

"எப்படிப்பட்ட மடையன் நான்!" என்று தமக்குள் சொல்லிக் கொண்டார், தம் கையிலிருந்த கம்பைச் சுழற்றிக் கொண்டே. "மாதவி என்னைக் கண்டு பயந்து போனதில் என்ன ஆச்சரியமிருக்கிறது!—பயந்துதான் போவாள். இந்த என் செய்கைகளுக்குச் சரியான தண்டனை, என்னைப் புளிய மரத்தில் கட்டி, புளியம் விளாறினால் வாங்குவதுதான்" என்று முணுமுணுத்துக் கொண்டே நடந்தார்.

அவர் சிந்தனை தடைப்பட்டது. நரிகளின் ஊளையிடும் சத்தம் கேட்டது! ஆகா! ஒரு காலத்தில் இந்தச் சத்தம் எவ்வளவு ரம்மியமாக இருந்தது! இந்தச் சத்தம் காது வழியாக உள்ளத்தில் பாய்ந்து அவரை எந்த எந்த உலகத்துக்கெல்லாம் எடுத்துச் சென்றது. ஆனால் இன்றோ அந்தச் சத்தம் அவரை எவ்வித உணர்ச்சிக்கும் உள்ளாக்கவில்லை!

இந்தத் திடீர் மாறுதலைக்கண்டு அவரே வியந்தார். அதுமட்டுமல்ல, இந்த அருவருக்கத் தக்க நரிகளின் ஊளைச் சத்தத்தைக் கேட்டு, புளகாங்கிதம் அடைந்தேனே! அப்படியானால் நான் எப்படிப்பட்ட முட்டாளாக இருந்திருக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டார்!

'ஊ! ஊ' என்று விடாது நரிகளின் சத்தம் வந்து கொண்டேயிருந்தது. கூடவே, ஒரு மனிதக் குரலும் கேட்டது. ஆம், அது கிட்டுவின் குரலேதான்!

முதலில் "ஊ! ஊ!" என்ற நரிகளின் சத்தம் கேட்டது.

"நீங்கள் போகாதீர்கள்! வேண்டிய நெல்லும் சோளமும் கொடுக்கிறேன். போகாதீர்கள்!" என்றது சிறுவனின் குரல்.

மறுபடியும் "ஊ! ஊ! ஊ!" என்ற நரிகளின் சத்தம் கேட்டது.

உடனே மாதவன் துரிதமாக நடந்தார். பனைமரங்கள் அடர்ந்து வளர்ந்திருந்த ஓரிடத்தில் கிட்டுவும் அரை டஜன் நரிகளும் விளையாடிக் கொண்டிருந்ததைப் பார்த்தார். கிட்டு இரண்டு நரிகளைக் கையில் பிடித்துக்கொண்டு ஒன்றின்மேல் சாய்ந்து கொண்டிருந்தான். மற்ற நரிகள் அவனைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன.

இந்தக் காட்சியிலிருந்து, கிட்டு அந்த நரிகளைப் போகவேண்டாம் என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டிருந்தான் என்பது தெளிவாகத் தெரிந்தது மாதவனுக்கு. மேலும், கிட்டு தன் தந்தையின் நெற்களஞ்சியத்தை அப்படியே தாராளமாக நரிகளுக்கு வழங்கிவிடத் தயாராக இருந்தான் என்பதும் தெரிந்தது!

நன்றி விசுவாச முள்ளவராக இருந்தால் இந்தக் காட்சியைக் கண்டு மாதவன் சந்தோஷப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அதற்கு மாறாக அவருக்குக் கோபம்தான் வந்தது.

நேற்றுவரை நரிகளைக் கட்டித் தழுவிக் கொண்ட மாதவன், இன்று அவற்றைப் பார்க்கும்போதே அருவருப்புக் கொண்டார். "கிட்டுவாவது, நரிகளிடம்

தோழமை கொள்ளவாவது!'' என்று எண்ணினர்.

"கிட்டு, வந்துவிடு! வந்துவிடு!" என்று இரைந்தார்.

அவரை அவநம்பிக்கையுடன் பார்த்துக் கொண்டிருந்தன சில நரிகள். வேறு சில நரிகள் சந்தேகத்துடன் வாலை ஆட்டி வர வேற்புக் கூறின. மாதவனே தடியை ஆட்டி விரட்டப் பார்த்தார். உடனே, எல்லா நரிகளும் சேர்ந்து அவர்மீது பாய்ந்து விரட்டின.

மாதவன் தம் வாழ்க்கையில் முதல் தடவையாக நரிகளிடமிருந்து ஓடினர். இப்போது அவரை அந்த நரிகளிட மிருந்து கிட்டு காப்பாற்ற வேண்டி யிருந்தது!

"போங்கள்! போய்விடுங்கள்! அவரை நெருங்காதீர்கள். அவரை ஒன்றும் செய்யா தீர்கள்" என்று கிட்டு கூவினன்.

கிட்டுவின் குரலைக் கேட்டதும் நரிகள் அடிபணிந்து நின்று விட்டன. எனினும் அதற்குள் மாதவன் நரிகளின் வெறுப்பை நன்ருகப் புரிந்து கொண்டு விட்டார். அவைகளின் ஸ்பரிசம் முன் போல் அன்பு ஸ்பரிசமாக இருக்கவில்லை. அவற்றின் வால்கள் முன்போல் அவ் வளவு மிருதுவாக இருக்கவில்லை. அவை களின் பாதங்களின் நகங்கள் பிராண்ட சௌகரியமாக நீட்டிக் கொண்டிருந்தன. அவற்றின் பற்களும் கண்களும் பயங்கர மாக இருந்தன. மாதவனுடன் முன்பு பழகிய நரிகளாகவே இல்லை. ஆம், அவ் வளவுக்கு மாதவனை ஒரு வேற்று மனித னுகக் கருதத் தலைப்பட்டன.

இப்படிப்பட்ட நரிகளிடம் தம் மகனை அர்ப்பணம் செய்ய மாதவன் விரும்ப வில்லை. கிட்டு ஒரு வார்த்தை கூறியதும் அத்தனை நரிகளும் மறைந்து விட்டன.

நரிகள் சென்றதும் கிட்டுவைப் பார்த்து "நீ ஏன் இங்கே இருக்கிருய்? நீ எப்படி இங்கே வந்தாய்?'' என்று இரைந்தார்.

"ஏன் என்னை இழுக்கிறீர்கள்? என்னை விட்டு விடுங்கள்" என்று கிட்டு அலறினன்.

"இந்த மாதிரி யெல்லாம் நீ அலையக் கூடாது. அம்மா உன் இந்தச் செய்கை யைக் கண்டு பயப்படுகிருள். மேலும் உன் மேல் அவளுக்கு அசாத்தியகோபம்; என் னுடன் வந்து விடு" என்ருர் மாதவன்.

"நான் வர மாட்டேன்" என்று பிடி வாதமாகக் கூறினன் கிட்டு.

"நீ வராவிட்டால் உன்னை அடிப் பேன்" என்று பிரம்பைக் காண்பித்து மிரட்டினர்.

"நீங்கள் என்னை அடித்தீர்களானல் நரிகளைக் கூப்பிடுவேன்" என்று கிட்டு பதில் சொன்னன். இதைக் கேட்டதும், கிட்டுவை அடிக்க மாதவன் ஓடினர்.

"ஊ...! ஊ...! ஊ...!" என்று கிட்டு கூவினன்.

கிட்டுவின் அழைப்பைக் கேட்டதும், எல்லாத் திசைகளிலிருந்தும் நரிகள் வரத் தொடங்கி விட்டன. இத்தனை நாட்கள் யாருக்கு மதிப்பும் மரியாதையும் அந்த நரிகள் அளித்து வந்தனவோ, அவருக்கு எதிராகக் கூடி விட்டன.

இதற்குள் காட்டில் யாரோ சிலர் கூப்பாடுபோடும் சத்தம்கேட்டது—மாத வனைத்தேடிவந்த ஆட்களின் சத்தம்தான்.

மாதவன், புறப்பட்டுச் சென்று சற்று நாழிகையானவுடன் மாதவிக்கு, கிட்டு வைப் பற்றிய கவலையைவிட அவரைப் பற்றிய கவலை பெரிதாகப் போய் விட்டது. கிட்டுவைத் தேடிக் கொண்டு போன தம் கணவர் மறுபடியும் நரிகள் கூட்டத்தில் பழையபடி அகப்பட்டுக் கொண்டு விட்டாரோ என்று பயந்து, குடிபடைகள் அத்தனை பேரையும் அவ ரைத் தேடி அழைத்துவர அனுப்பி வைத்தாள். அவள் பயந்தது பொய்யாகப் போகவில்லை. அவள் நினைத்தது சற்று மாறுதலுடன் நிகழ்ந்து விட்டது. நரி களின் அன்பைப் பெறுவதற்குப் பதில் நரிகளின் எதிர்ப்பைப் பெற்ருர்—அதுவும் தம் சொந்த மகனுடைய தலைமையில்! அவ்வளவு தானே!

இந்த காட்சியைப் பார்த்த ஜமீன் குடி படைகள் அப்படியே பிரமித்து நின் ருர்கள். நரிகளிடையில் தந்தையும் தன யனும் சேர்ந்து நின்றிருந்தால் அவர்கள் அப்படிப் பிரமித்திருக்க மாட்டார்கள். ஆனல் அவர்கள் இருவரிடையில் ஒரு பெரிய நரிக்கூட்டம் நின்றது. அந்த நரிக் கூட்டத்தின் அப்புறம், வெகு உற்சாக மாகச் சிரித்துக் கொண்டு கிட்டு நின்ற தைப் பார்த்தபோதுதான் அவர்கள் பிர மித்துப் போனர்கள்.

கிட்டு மறுபடியும் நரிகளைப் போகச் சொன்னன். அவை போய் விட்டன.

நரிகளிடமிருந்து கிட்டுவைக் காப் பாற்றி அழைத்துச்செல்ல வந்தவர்கள், நரிகளின் அன்பிலிருந்து சிறுவனை அவன் இஷ்டமின்றி அழைத்துச் செல்லவேண் டியதாகி விட்டது. 'இதென்ன ஆச்சரிய மாக இருக்கிறதே' என்று நினைத்தார்கள்.

எனினும் கிட்டுவை வெகு சிரமப்பட்டு வீட்டுக்கு அழைத்துச் சென்ருர்கள். ஆனல் இந்தச் சம்பவம், அன்றைக் கெல் லாம் மாதவனைக் கவலையில் ஆழ்த்தி விட்டது. மனது நிம்மதி கொள்ளவில்லை. மறுபடியும் கிட்டு நரிகளிடம் ஓடி விடு வானே என்று பயந்தார். (தொடரும்)

# சேவா சங்கத்தின் திருப்பணி

ரஜனி

கொழும்பு. ஜூன் 27—

அகில இலங்கை காந்தி சேவா சங்கம் இங்கு பல உபயோகமான சேவைகளைச் செய்து வருகிறது. காந்திய தத்துவங்களை இலங்கைத் தமிழரிடையிலும் சிங்களவரிடையிலும் பரப்ப அவர்கள் செய்து வரும் முயற்சிகளைப் பாராட்ட வேண்டும். காந்தி மகான் நூல்களைச் சிங்களத்தில் மொழி பெயர்த்து வெளியிடும் பிரசுர உரிமையை நவஜீவன் டிரஸ்ட் ஸ்தாபனத்தினிடமிருந்து அவர்கள் பெற்றிருக்கிறார்கள். ஏற்கெனவே சில நூல்களைச் சிங்களத்தில் மொழி பெயர்த்து விட்டதாயும், அச்சிடுவதற்குத் தயாராயிருப்பதாயும் சென்ற வாரம் வண்ணார்ப்பண்ணையில் நடைபெற்ற காந்தி சேவா சங்கக் கூட்டத்தில் பண்டிட் செ. துரைசிங்கம் கூறினார். காந்தியடிகளின் நூல்களையெல்லாம் சிங்களத்தில் மொழி பெயர்த்து வெளியிடும் வேலைக்கு சுமார் எழுபத்தையாயிரம் ரூபாய் தேவைப்படுமென்றும், இந்த நற்பணிக்குத் தர்ம சிந்தையுடையவர்களெல்லாம் உதவி புரிய வேண்டுமென்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

இலங்கை ரேடியோவில் மாதம் ஒரு முறையேனும் காந்தியத் தத்துவங்களைப் பற்றிப் பேச ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும், ஆபாசமான சினிமாப் படங்களையும் பிரசுரங்களையும் அரசாங்கம் தடை செய்ய வேண்டுமென்றும் கூட்டத்தில் தீர்மானங்கள் நிறைவேறின.

சமீபத்தில் 'கல்கி' ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி இலங்கைக்கு விஜயம் செய்யும் பொழுது அவரை யாழ்ப்பாணத்தில் வரவேற்க சங்கத் தலைவர் ஸ்ரீ எஸ். எச். பேரின்ப நாயகம் தலைமையில் ஒரு வரவேற்புக் கமிட்டியும் மேற்படி கூட்டத்தில் நியமிக்கப்பட்டது.

## சுத்தானந்த பாரதியார் விஜயம்

புதுவை யோகி சுத்தானந்த பாரதியார் சமீபத்தில் இலங்கைக்கு விஜயம் செய்யலாமென்று தகவல் கிடைத்திருக்கிறது. மட்டக்களப்பு தமிழ்க் கலை மன்றத்தினர் அடுத்த மாதம் சுவாமி விபுலானந்த அடிகளின் நினைவு தினத்தைச் சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள். அந்த வைபவத்தில் கலந்து கொள்ள வரவேண்டுமென்று மன்றக் காரியதரிசி ஸ்ரீ வி. சி. கந்தையா சுத்தானந்த பாரதியாருக்கு அழைப்பு அனுப்பியிருந்தார். அதற்கு சுவாமிஜி எழுதியுள்ள பதிலில், ஆறு மாதங்கள் சமாதியிலிருந்த பிறகு திருவருள் ஆணையை மேற்கொண்டு தொண்டு தொடங்கும் பொழுது இலங்கைக்கு வரக்கூடுமென்றும், ஒரு மாதம் இலங்கையைச் சுற்றி நாவலர் பெருமான் திருவுள்ளத்தை இலங்கையில் நடிக்க வைக்க வேண்டுமென்ற ஆவல் இருப்பதாயும், விபுலானந்த சுவாமிகள் திருநாள் முத்தமிழ் விருந்து நாளாக இருக்க வேண்டுமென்றும் குறிப்பிட்டிருக்கிறார். சுவாமி சுத்தானந்த பாரதியாரின் இலக்கியப் பொக்கிஷங்களுக்கு இலங்கையில் ஒரு தனி மதிப்பு உண்டு. ஆகவே சுவாமிஜியின் விஜயத்தை இலங்கைத் தமிழர்கள் எவ்வளவு ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்களென்பதைச் சொல்லத் தேவையில்லை.

## தலைவரின் தியாகம்

இலங்கை பார்லிமெண்டு சரித்திரத்தில் இது வரையில் இல்லாத ஒரு பதவிக்கு இடது சாரிக் கட்சியைச் சேர்ந்த டாக்டர் என். எம். பெரைரா இப்பொழுது நியமிக்கப்பட்டிருக்கிறார். பார்லிமெண்டு சபையில் சர்க்கார் கட்சிக்கு எதிராக நான்கு அரசியல் கட்சிகளும் சில சுயேச்சைப் பிரதிநிதிகளும் இருந்த பொழுதிலும், மற்ற நாடுகளிலிருப்பதைப் போல எதிர்க்கட்சிகளுக்குப் பொதுவான ஒரு தலைவர் இல்லாதது பார்லிமெண்டின் அலுவல்கள் நடப்பதற்குப் பெரும் தடையாயிருந்தது. இதைச் சபா நாயகர் ஸர் பிரான்ஸிஸ் மொலமூரே பல சந்தர்ப்பங்களில் குறிப்பிட்டு எதிர்க் கட்சிகளுக்கிடையில் ஒற்றுமை ஏற்படா விட்டால்

தாமே எதிர்க் கட்சித் தலைவர் ஒருவரை நியமிக்கப் போவதாக அறிவித்தார். இதன் மீது சென்ற வாரம் இலங்கை இந்திய காங்கிரஸ் உள்பட எல்லா எதிர்க் கட்சிகளும் கூடி டாக்டர் என். எம். பெரேராவைப் பார்லிமெண்டில் தங்களுடைய தலைவராகத் தேர்ந்தெடுத்தன. இதைக் கம்யூனிஸ்டுக் கட்சி மட்டும் ஆதரிக்கவில்லை.

சென்ற வெள்ளிக்கிழமை பார்லிமெண்டு கூடிய பொழுது எதிர்க் கட்சித் தலைவராக டாக்டர் பெரேராவை சபாநாயகர் நியமித்தார். இலங்கை பார்லிமெண்டில் எதிர்க் கட்சித் தலைவர் ஒருவர் நியமிக்கப்படுவது இதுவே முதல் முறையாகும். எதிர்க் கட்சித் தலைவருக்கு ஒரு மந்திரிக்குரிய சம்பளமும் அலவன்சுகளும் உண்டென்றாலும் அவற்றைத் தாம் வாங்கிக் கொள்ளப் போவதில்லையென்றும் பார்லிமெண்டு மெம்பருக்குள்ள சம்பளத் தொகையை மட்டுமே வாங்கிக் கொள்ளப் போவதாயும் டாக்டர் பெரேரா அறிவித்திருக்கிறார்.

## இந்திய காங்கிரஸின் வெற்றி

இலங்கை இந்திய காங்கிரஸுக்கு இவ்வாரம் ஒரு பெரிய வெற்றி கிடைத்திருக்கிறது. ரப்பரின் விலை குறைந்தபொழுது தோட்ட முதலாளிகள் தொழிலாளரின் தலையில் கை வைத்தனர். அரசாங்கமும் முதலாளிமார்களை ஆதரித்து, தொழிலாளருக்கு நியாயமான சம்பளம் கொடுப்பதைக் கட்டாயப்படுத்தும் சட்டத்தை நிறுத்தி வைத்தது. பிறகு ரப்பர் விலை மள மளவென்று உயரவும் தொழிலாளர் சம்பளத்தை உயர்த்த வேண்டுமென்று இந்திய காங்கிரஸ் கிளர்ச்சி செய்தது. அது மட்டுமல்ல. சென்ற மே மாதம் முதல்தேதியிலிருந்தே அதிகரித்த சம்பள விகிதங்களின்படி கணக்கிட்டுக் கொடுக்க வேண்டுமென்றும் இந்தக் கோரிக்கையை வற்புறுத்துவதற்காக ஜூன் 16-ம் தேதி இலங்கை முழுவதிலுமுள்ள ரப்பர் தோட்டங்களில் ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்வதென்றும் காங்கிரஸ்காரர்கள் தீர்மானித்தார்கள்.

ஆயினும் சர்க்காரின் சம்பள நிர்ணய சபை கூடுவதாயிருந்ததினால் நல்லெண்ணம் காட்டும் முறையில் வேலை நிறுத்தம் செய்வதை காங்கிரஸ் ஒத்தி வைத்தது. இந்த நல்லெண்ணம் வீண் போகவில்லை. நேற்று சம்பள நிர்ணயசபை கூடி சுமார் மூன்று லட்சம் ரப்பர் தோட்டத் தொழிலாளருடைய சம்பளங்களையும் உயர்த்தியது. தோட்ட முதலாளிமார்களும் நல்லெண்ணம் காட்டி அதிகரித்த புதிய விகிதங்களின்படி மே மாதம் முதல் தேதியிலிருந்தே கணக்கிட்டுக் கொடுத்து விடுவதாக அறிவித்திருக்கின்றனர். ஒரு நாள் வேலை நிறுத்தமுமின்றி சமாதான முறையிலேயே இலங்கை இந்திய காங்கிரஸ் தனது கோரிக்கையை வெற்றிகரமாகச் சாதித்து விட்டது.

## கடிதமும் பதிலும்!



# படிப்பினை

ரா. ஸ்ரீ

ஒரு சமயம் என்னுடைய தாயாருக்கு உடம்பு சரியாயில்லை. டாக்டர் ஒரு இஞ்செக்ஷன் மருந்து எழுதிக் கொடுத்து, அதை உடனே வாங்கிவர வேண்டுமென்று சொன்னார். தாமதமின்றி இஞ்செக்ஷன் கொடுத்தால்தான் என் தாயார் பிழைப்பாள் என்றும் சொன்னார்.

மூன்று, நான்கு மருந்துக் கடைகளில் விசாரித்துப் பார்த்தேன். மருந்து கிடைக்கவில்லை. ஒவ்வொருவரும் அந்த மருந்து நாராயணஸ்வாமி செட்டியார் கடையில்தான் கிடைக்கும் என்றும், வேறு எங்கும் கிடைப்பது அரிது என்றும் சொன்னார்கள்.

நாராயணஸ்வாமி செட்டியார் கடைக்குள் நுழைந்து "செட்டியார்வாள், நமஸ்காரம்" என்றேன்.

செட்டியார் என்னை உற்று நோக்கினாரே தவிர, "என்ன வேண்டும்?" என்று ஒரு வார்த்தைகூடக் கேட்கவில்லை.

இந்த அவமதிப்பைப் பொருட்படுத்தாமல், 'பிரிஸ்கிருப்ஷனை' அவரிடம் காண்பித்து, "செட்டியார்வாள்! இந்த மருந்து இருந்தால் கொடுங்கள். ஆறு 'ட்யூப்'கள் வேண்டும்" என்றேன்.

"என்னங்க, உங்களுக்கெல்லாம் இந்த சீமைச் சரக்கு என்னாத்துக்குங்க? நீங்க பெரிய சுதேசி ஆசாமி ஆச்சே. அயல்நாட்டு மருந்தை உபயோகிக்கலாமா, நீங்களெல்லாம்? ஏதாவது மிளகு காஷாயமோ, மஞ்சள் பத்தோ உபயோகித்தால் உடம்பு குணமாகி விடுகிறது" என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தார்.

எப்படியாவது மருந்தை வாங்கிக் கொண்டுதான் வீடு திரும்புவது என்ற என்னுடைய தீர்மானத்தை அவருடைய கேலிப் பேச்சு திடப்படுத்தியது.

"மற்றக் கடைகளில் விசாரித்தேன். உங்களிடம்தான் இந்த மருந்து கிடைக்கும் என்று சொன்னார்கள். அதனால் உங்களை நாடி வந்தேன். தயவு செய்து கொடுங்கள்" என்று கேட்டேன்.

"மருந்து என்னமோ என் கடையில் இருக்கிறது. அதோ அங்கே மேலேயிருக்கும் அலமாரியில் இருக்கிறது. நீங்களேதான் அந்த ஏணியைக் கொண்டு, மேலே ஏறி மருந்தை எடுத்துக் கொள்ள வேண்டும்" என்றார். அவர் காண்பித்த அந்த அலமாரி தரையிலிருந்து பதினைந்து அடி உயரத்திலிருந்தது.

செட்டியார் இப்படிச் சொன்னதும் பக்கத்திலிருந்த சிப்பந்தி "களுக்" கென்று சிரித்தான். நான் தயங்கினேன்.

"என்ன தயங்குறீங்க; காங்கிரஸிலே சேர்ந்து ஜெயிலுக்குப் போனவர்களுக்குப் பத்தடி ஏணி மேலே ஏறுவது ஒரு பிரமாதமா?" என்றார் மேலும் ஒரு புன்னகையுடன்.

சிப்பந்தி மறுபடியும் சிரித்தான்.

உடனே நான் ஏணிமேல் ஏறி, அந்த மருந்துப் பெட்டியை எடுத்தேன், மேலே இருந்தபடியே. "செட்டியார்வாள், மருந்து என்ன விலை?" என்றேன்.

"ஆறு 'ட்யூப்'பும் பதின்மூன்று ரூபாய் இண்டணா" என்றார்.

செட்டியாரும் சிப்பந்தியும் பார்க்காத சமயத்தில், மருந்துப் பெட்டியை என் பையில்போட்டுக்கொண்டு, பதின்மூன்று ரூபாய் இரண்டணாவை எடுத்து, மருந்துப் பெட்டி இருந்த இடத்தில் வைத்தேன். ஏணியை விட்டுக் கீழே இறங்கி, 'விர்' ரென்று கடையிலிருந்து வெளிவந்தேன்.

"என்னங்க, மருந்து வாங்கல்லியா? விலையைக் கேட்டுட்டுச் சும்மா போறீங்களே? ஆமாம்! அவ்வளவு பணம் உங்களைப்போலே ஜெயிலுக்குப் போனவங்ககிட்டே எங்கே இருக்கப் போவுது?" என்றார் செட்டியார்.

"இல்லை, செட்டியார்வாள்! மருந்து வாங்கிக் கொண்டாகி விட்டது" என்று மருந்துப் பெட்டியைப் பையிலிருந்து எடுத்துக் காண்பித்தேன்.

"இது நல்ல யோக்கியதையாயிருக்குதே, மருந்தை எடுத்துப் பையில் போட்டுக்கிட்டு, பணத்தைக் கொடுக்காமல் கம்பி நீட்டுவது!" என்றார் செட்டியார் ஆத்திரத்துடன்.

"கோபப்படாதீங்க, செட்டியார்வாள்! பணம் வேணுமானால், மருந்து எங்கு இருந்ததோ, அதே இடத்தில் பாருங்க, தானே கிடைக்கும்" என்றேன்.

சிப்பந்தி சிரித்தான்.

## திருத்தம்

சென்ற ஜூன் மீ 18உ கல்கி இதழில் வெளியான ஸெனட்டர் விக்டோரியா பற்றிய செய்தியில் "சரித்திரப் பிரசித்திப் பெற்ற மாவியங்களு சின்னங்களை ரூ. 12,000 கொடுத்து வாங்கினார்" என்று வெளியாகி இருக்கிறது. அது தவறு. மேற்படி மாவியங்களு சின்னங்களைப் புதுப்பிக்க ஸெனட்டர் விக்டோரியா ரூ. 12,000 நன்கொடை அளித்தார்.

## தேர்வைக் குறித்த பயம் இருக்கவில்லை க்ருஷன் காரணத்தைப் போக்கும் வரை



அவனைவிட வேறொரு மாணவனும் அவ்வளவு அக்கறையாகப் பரிக்ஷையில் தேறுதலையோ, அல்லது அதிகம் உழைக்கவோ இல்லை. அடிக்கடி பரிக்ஷையில் தோல்வி மேலும் அதிக நேரம் புத்தகங்களுடன் கழிக்கவே தூண்டிற்று. அதில் யாதொரு பிரயோசனமும் இல்லை, படிப்பில் கவனம் செலுத்தவோ அல்லது விஷயங்களை மனதில் வைக்கவோ முடியவில்லை. இவ்வாறு மனமுடையும் தருணத்தில்தான் ஒரு நண்பன் "க்ருஷேனை"ச் சிபார்சு செய்தனன்.........

மாணாக்கர்கள் மிகவும் தீவிரவாதிகள். ஆனால் கல்வியினால் பெறும் மதிப்பிற்காக தேக நலத்தை இழப்பதென்றால் கல்வியின் நலன்கள் பயனற்றதே. நீண்ட நேரப் படிப்பு, சுத்தமான காற்றும் தேகாப்யாசமுமின்மை, இவை ஈரல், மூத்திரக்காயம், குடல்கள் இவற்றை மந்திக்கச் செய்கின்றன. அதனால் தேங்கியுள்ள அசுத்தங்கள் ரத்த ஓட்டத்தையும் அசுத்தப்படுத்துகின்றன. ஒவ்வொரு அறிவும் பாதிக்கப்படுகின்றது. அநேகமாக முதன்மையாகத் தேறக் கூடியவர்களும் தோற்குமாறு ஏற்படலாம்.

தேக உழைப்பின்மையும், நீண்ட நேரம் உட்கார்ந்திருப்பதினாலும் ஏற்படக் கூடிய விஷங்களினால் பாதிக்கப்பட்டால் இன்றே "க்ருஷேனை"க் கொண்டு தாக்குங்கள். க்ருஷனிலுள்ள லோக தாதுக்கள் உபாதைகளின் மூல காரணத்தை ஆறுவிதங்களில் தாக்குகின்றன. மூத்திரக் காய்கள், ஈரல் குடல்களும் இயற்கையாகவே இயக்கப்படுகின்றன. பரபரப்பு, உற்சாகமின்மை அசௌகரியம், இவை ஒழிந்து ஊக்கமும், உற்சாகமும் திரும்பக் கிடைக்கின்றன. ஒவ்வொரு மனோசக்தியிலும் சரியானபடி ஞாபகம் வழங்கப்படுகிறீர்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் "க்ருஷன்" ரூ. 1-10-0க்குக் கிடைக்கின்றது.

க்ருஷன் ஈ. கிரிபித்ஸ் ஹியூஸ், லிட்., மான்செஸ்டர். இங்கிலாந்து அவர்களால் தயாரிக்கப்பட்டு கார்லீ கம்பெனி லிட்., பம்பாய், மதராஸ், கல்கத்தா அவர்களால் விநியோகிக்கப்படுகின்றன.




## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்!




# 15 வருஷங்களுக்கு மேலாக




# ஐ·டி·எல்·தயாரிப்புகள்

வைத்தியர்களால் தவறாமல் சிபார்சு செய்யப்பட்டு வருகின்றதுடன், நம்பிக்கையாக உயர்தரமான பயனளிப்பதில் ஸ்திரமான கீர்த்தி பெற்று விளங்குகின்றன.

1. காட்லிவர் ஆயிலுடன் கூடிய மால்ட் எக்ஸ்ட்ராக்ட்
2. கிளாப்ஸிரப்
3. இடியால்
4. ஜெர்கோரால்
5. பெப்ருலின்
6. ஜெலேடின்
7. விடோபெரின்
8. கிளூகோனேட் D
9. விடோமால்ட்
10. ஹைபா-டி காட்லிவர் ஆயில்

தயாரிப்பவர்கள்
மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேடரி லிட்.,
மல்லேஸ்வரம், பெங்களூர்.

விற்பனை ஏஜண்டுகள்:
பெஸ்ட் & கம்பெனி லிமிடெட்.
தபால்பெட்டி நெ. 63, மதராஸ்.

REGD. NO. M. 4392.



அழுக்கடைந்த கயிறு ஹானியற்றது
போலிருக்கிறது. ஆனல்

**இந்த கைகள்**
**மறைந்திருக்கும் அபாயத்தை**
**தாங்குகின்றன!**

—அழுக்கிலிருக்கும் கண்ணுக்குப்புலப்படாத
கிருமிகளில் அபாயமிருக்கிறது.

**லைப்பாயினல் அடிக்கடி கழுவுங்கள்**

# லைப்பாய் சோப்




அழுக்கிலிருக்கும்
கிருமிகளிலிருந்து
உங்களைக்காப்பாற்றுகிறது!

L. 143-50 TM